



மூலாதார ஸ்திதம் தேவம் மூலாக்ஞான விநாசினம்
நமாமி குஞ்சரேந்திராஸ்யம் குருரூபம்ஹ்யநுக்ரஹம்

# அன்பளிப்பு

ஆனந்தானுபவத்தின் மேலீட்டில் ஸ்ரீ ஆவுடையம்மாள் தயை மேற்கொண்டு ஸமஸ்த ஜனங்களும் ஆத்மஞானமடைந்து ஜீவன் முக்தர்களாக வேண்டி பாடியுள்ள பாடல்கள் இங்கு அச்சிடப்பட்டிருக்கிறவைகளை, பல இடங்களிலுமிருந்து எனக்கு கிடைக்கத்தந்த பலருக்கும், இந்த பாடல்களை இவ்வளவு அழகாகவும், வெகு காலத்துக்கு அளவிறந்த ஜனங்களுக்கு உபகாரமாக யிருக்கும்படிழும், அச்சுப்போட்டு தந்து உதவிய ஸ்ரீ S. V. ஸ்வாமி அவர்களுக்கும், கொஞ்சமும் சிரமத்தை பாராமல் மிகுந்த அக்கரையுடன் அச்சிட்டுதந்த ஜெயம்கம்புனி, பாலா அச்சுக்கூடப்பதிப்பாளருக்கும், பல தொந்தரவுகளிடையில், அச்சுப் போட்டு வருவதையெல்லாம் வெகு சிரத்தையுடன், சரிபார்த்து தந்த எனது மித்திரரான ஸ்ரீ நா. இராமசந்திரய்யருக்கும், இதற்கான எல்லா ...டுகளையும் கவனித்து செய்து தந்த ஸ்ரீ வெ. குஞ்சிதபாதம் அய்யருக்கும். மற்றும் ஸகாய காரிகளாகயிருந்த எல்லாருக்கும் பரம குரு ஸ்ரீவெங்கடேசுவரர், ஆவுடையம்மாளுடைய பரிபூர்ண கிருபையிருந்து இஷ்டார்த்த ஸித்திகளடைந்து ஞானனந்த பிராப்தியுண்டாக மிகவும் வேண்டுகிறேன்.

---

இந்த புஸ்தகம் ஆஸ்திக ஜனங்களுள் அமர்ந்து கிடக்கும் ஆர்வத்தை தூண்டிபாமலக்ஷியத்தில் ருசியை உண்டாக்கி அதை அடைய கட்டாயம் வேண்டியபடி முயற்சிக்க செய்து ஞானனந்த பிராப்தியை நிச்சயம் செய்விக்குமென்பதில் கொஞ்சமும் ஸந்தேகமில்லை.

விஜயஞூ சித்திரைமீ<br>பௌர்ணமி

1953.

ஆய்குடி வெங்கட்ராம சாஸ்திரி

அவெட்ஸி நாகராஜ்

# முகவுரை

---

ஸ்ரீ. சங்கர பகவத் பாதாள் திருவேச நல்லூரில் ஸ்ரீவெங்கடேச்வரராய் அவதரித்து ராமநாம மகிமையை உலகமெங்கும் பரவும்படிசெய்து வரும்போது திருவனந்த புரம் ஸமஸ்தானத்தை சேர்ந்த செங்கோட்டை ஆற்றங் கரை தெருவில் ஆவுடையம்மாள் என்ற மங்கை பால்யத்தி லேயே கணவனை யிழந்து நாமினி என்ன செய்வோம் கடவுளை வணங்கி இனிமேல் ஜன்மமேயில்லாதபடி எப்படி செய்வோம் என்று மகா தாபத்துடனிருக்க பகவத்கிருபை... அந் ஸமயம் ஸ்ரீ வெங்கடேசுவரர் தாமே அவ்விடம் போய் ஆற்றங்கரை தெருவில் ராம நாமத்தையே உறக்க சொல்லிக் கொண்டு வருவதை அம்மங்கை கேட்டு மனம் கசிந்து அப்பெரியோர் பாத கமலத்தில் பணிந்து கை கூப்பி என்னை துக்ககடலில் நின்றும் கரை யேற்றிவிட வேணுமென்று வினயவணக்கத்துடன் கேட்க அப்பெரியோர் அன்னங்கைக்கு இரங்கி தலைமேல் கையை வைத்து அனுக்கிரகித்து உப தேசம் செய்து ஆத்மஞானத்தையும் அதற்கான ஸாதனங் களையும் அருளி அடிக்கடி வந்து அவள் ஸரியாய் அப்பிய சித்து வருகிறாளா என்று கவனித்துவர அம்மங்கை குருநாத னருளினால் நிர்விகல்ப ஸமாதியுமிருந்து ஆனந்தத்தை யனுபவித்து ஸந்தோஷம் மேல்கொண்டு பரிபூர்ண தய வுடனே கலியிலுள்ளோர் அனைவரும் ஜன்மதுக்கத்தை யொழித்து ஆத்மானந்தத்தை யனுபவித்து ஜீவன்முக்தா ...கவேணுமென்று எண்ணி எத்தனையோ பாடல்கள் ...னதில் ஏட்டு பிரதிகளில் அங்கங்கே சிதரி கிடந்

என்னாலானவரை தேடி விசாரித்து என்கையில் கிடைத்ததை எடுத்து பெரியோர்களால் பார்வையிடப்பட்டு இந்த பாடல்கள் இங்கு தொகுத்து கோர்த்து அச்சிடப்பட்டிருக்கின்றன. 400 வருஷமாகியும், ஆவுடையம்மாள் திருக்குற்றாலம் மலையிலேறினவள் இன்னும் வரவில்லையென்று இன்றும் வழங்கி வருவது எல்லோருக்கும் தெரிந்ததே. ஆஸ்திக ஜனங்கள் யாவரும் ஸ்வானுபவத்தின்மேலீட்டினால் வெளிவந்த இந்த பாடல்களை படித்து ஈசுவரனை பிரார்த்தித்து பரமகுருவை நாடி அவரருளும் உபதேசமும் பெற்று ஸத்ஸங்கம்கொண்டு ஸாதனங்களுடன் திடவிசுவாசத்தோடு துடர்ந்து அப்பியாஸித்து ஆத்ம ஞானானந்தத்தை அடைந்து பவ ஸாகரத்தைக் கடந்து முமுக்ஷுக்களாக வேணுமாய் மிகவும் பிரார்த்திக்கிறேன்.

சென்னை.

ஆய்குடி அ. வெ. சாஸ்திரி:

---

# அத்வைத மெய் ஞான ஆண்டி

பிரஹலாதருக்காகத்தாண்டி
பெரும்தூணி லவதரித்தாண்டி
பழயவினை தீர்க்கத்தாண்டி
பரமகுருவாய் வந்தாண்டி

பரிச்சின்னம் பார்த்து பேத்தாண்டி
பரிபூர்ணமாக வந்தாண்டி
பக்தாளுக்காகவே தாண்டி
பாரி லவதரித்தாண்டி

நரமிருக ரூபமாய் தாண்டி
நாலுவித முக்தி கொண்டாண்டி
இரணியன் மாரிலே தாண்டி
எளிதாகவே பிளந்தாண்டி

பேருயிர முள்ளோன் தாண்டி
பெண்களை விட்டு வாருண்டி
எவ்விதமோ இவன் தாண்டி
இங்கே எழுந்தருளினுண்டி

கோடி பெண்களைத் தாண்டி
கோரணி கொண்டிருப்பாண்டி
வேஷதாரி போலே தாண்டி
வேண்டி யவதரித்தாண்டி

கோடிவிஷயங்களை தாண்டி
அவன் கூடிக்கொண்டே புசிப்பாண்டி
வேஷம் மாரியே தாண்டி
விலக்ஷணமாக்கிக் கொள்வாண்டி

பக்குவ சித்தாளைத்தாண்டி
பார்த்து பார்த்து பிடிப்பாண்டி
எத்தனை பேரைத்தாண்டி
ஏத்தியே மோக்ஷ மீன்ருண்டி

சித்தம் பொல்லாதவன் தாண்டி
அவன் சேராதபேரை சேர்ப்பாண்டி
ஸாதன சதுஷ்டர்களைத் தாண்டி
[illegible]வசமாக்கிக் கொள்வாண்டி

மாயை தமக்கிவன் தாண்டி
தானும் வசமாகேனென்றாண்டி
பொல்லாதவ னிவன் தாண்டி
பலர்சொல்லே கேட்டேயிருந்தேண்டி

நல்லவன்போ லிவன் தாண்டி
இந்நாட்டி லெழுந்தருளினுண்டி
மெள்ளமெள்ள யிவன் தாண்டி
வீட்டறதியில் வந்தாண்டி

பையபைய யிவன் தாண்டி
பரப்ரம்மம்நீஎன்று சொன்னுண்டி
யாரென்றென்னை கேட்டாண்டி
நானறியாது போலிருந்தேண்டி

அகங்கார அனலேத் தாண்டி
அவனாற்றி யணைத்து விட்டாண்டி
அகத்திலிருந்து கொண்டாண்டி
அகமில்லை என்று பண்ணிவிட்டாண்டி

அஞ்ஞான பிராந்தியை தாண்டி
சற்றே கடைக்கண்ணுல் பார்த்தாண்டி
பார்த்த பார்வையால் தாண்டி
பவஸாகரம் வற்றடித்தாண்டி

பக்தி துறட்டியால் தாண்டி
என்சித்தம் பரித்துக்கொண்டாண்டி
அரசடிக்கே யழைத்தாண்டி
அஹம் பிரம்மாஸ்மி என்றாண்டி

தலேமேல் கையை வைத்தாண்டி
பிரம்மம்ஸத்தியம் ஸத்திய மென்றாண்டி
உன்னை யரிவாயோ என்றாண்டி
ஒன்றும் சொல்லா திருந்தேண்டி

தன்னையரி என்றாண்டி
அவன் ஸம்ஞையாக சொன்னுண்டி
சேர்வையை கண்டபின் தாண்டி
திரும்பிபோகாமல் போனேண்டி

மோகத்தை மாற்றிவைத்தாண்டி
மோக்ஷச்சை யளித்தாண்டி
தாயோடு பிள்ளையைதாண்டி
ஸகலமும் நான் மரந்தேண்டி

பாத கமலத்தைத் தாண்டி
பரமென்றெண்ணிக் கொண்டேண்டி
அஞ்சினபேரை போலேதாண்டி
நானும்கொஞ்சம் பயந்திருந்தேண்டி

அனேக சுருதிகள் சொல்லித்தாண்டி
அனுபவித்து பாரென்ருண்டி
ஸங்கல்பத்தாலே தாண்டி
தானேபிறந்தா யென்ருண்டி

உன்னுலே கல்பிதமென்ருண்டி
ஒளிக்குமொளி சொன்னுண்டி
உனக்கு பயமில்லை என்ருண்டி
நானுமுற்றுற்று பார்த்திருந்தேண்டி

வெறிக்கும் நிலவுபோல் தாண்டி
வெட்டவெளி யாக்கினுண்டி
தர்ப்பண பிம்பம்போல்' தாண்டி
ஜகதுத்பத்தி என்ருண்டி

அத்தையரிந்து நான் தாண்டி
அதிஷ்டானுமா யிருந்தேண்டி
காரணமில்லாதே தாண்டி
இந்தகாரியம் கூடாதென்ருண்டி

பொன்னில் பிரிவுபோல் தாண்டி
உனக்கு பேதமில்லை என்ருண்டி
த்ருபுடியை வெட்டி விட்டாண்டி
சித்ஜடத்தை யறுத்து விட்டாண்டி

அறிவுக் கறிவினை தாண்டி
நானப்போதே யுண்மை கண்டேண்டி
விருத்தி லயித்தால் தாண்டி
இந்த விகல்பமே தோணு தென்ருண்டி

ஸ்வானுபவத்தாலே தாண்டி
ஸுஷுப்திபோலிருக்கு மென்றுண்டி
மடத்தை யிடித்தால் தாண்டி
மடமாகாசமாகு மென்றுண்டி

புரத்தை யிடித்தால் தாண்டி
பரிபூரணமாகு மென்றுண்டி
மரத்தை கடைஞ்சால் தாண்டி
அதில் வன்ஹியிருக்கும்போல் தாண்டி

அகத்தை யரிந்தால் தாண்டி
அதிலேயிருப்பாய் என்றுண்டி
மூர்த்திகளை கோடிதாண்டி
நானும் முட்டியே குட்டிக்கொண்டேண்டி

ஏத்தியே போரு மென்றுண்டி
எங்குமானுய் என்றுண்டி
நல்லகுறிக்காரன் தாண்டி
நானும் நாணயம் கண்டுகொண்டேண்டி

கையை பிடித்தேதாண்டி
குறிகண்டாப்போல் சொல்லிவந்தாண்டி
விதிநிஷேதங்களை தாண்டி
நிமிஷத்தில் போக்கி வைத்தாண்டி

அதிசயமதிசய மிவன்தாண்டி
யாரோடொப்பு சொல்வேண்டி
சொன்னபடிக்கித் தாண்டி
நானும் சோதித்து பார்த்து கொண்டேண்டி

ஒன்றொன்றுகவே தாண்டி
நானு முண்மை கண்டு கொண்டேண்டி
முண்டை யொருத்தி என்றுண்டி
நானும் முடிவினை கண்டு கொண்டேண்டி

மாயச்செருக்கியைத் தாண்டி
வெளியே தள்ளுவாய் என்றுண்டி
இல்லத்து தீவினை தாண்டி
உன்னிஷ்ணை நீங்கு மென்றுண்டி

கன்னி யருளாலே தாண்டி
கடும்வரத்தா யிருக்குமென்றுண்டி
பிரம்மத்தைவிட்டு நீதாண்டி
பிரிந்து திரிந்தாய் என்றுண்டி

குருநாதனை பூஜித்தால் தாண்டி
உனக்கு நன்மைவரு மென்றுண்டி
கும்பிக்கு சோரிடு என்றுண்டி
கூடைக்கு முத்திடு என்றுண்டி

கோதை யருளாலே தாண்டி
உன்னை கூட்டி வைப்பா ளென்றுண்டி
வேலா முருகா வென்றுண்டி
வெளியிலே வாரு மென்றுண்டி
கோலால் குறிகள் பார்த்தாண்டி
குணங்களும் குற்றமென்றுண்டி

சித்தம்சுத்தி போருதென்றுண்டி
ஸத்தியமாய் என்னைத்தாண்டி
ஸமரஸ மாக்கி விட்டாண்டி
குலதேவதை குற்றம்தாண்டி
உன்னைசேரவிடலை என்றுண்டி

குருநாத னருளாலே தாண்டி
உனக்கு நன்மை கிடைக்கு மென்றுண்டி
ப்ரத்தியக் ப்ரம்மத்தை தாண்டி
பரோக்ஷமென் றெண்ணாதே என்றுண்டி

உக்கலில் பிள்ளைபோலே தாண்டி
உனக்குள்ளே யிருப்பாய் என்றுண்டி
காக்காயக்ஷம் போலேதாண்டி
யிதோகாட்டும் சுருதிகளென்றுண்டி

நேதிநேதி யாலே தாண்டி
நீயும் சேவித்திருப்பாய் என்றுண்டி
பாலுக்குள்ளே நெய்போலே தாண்டி
இந்த பாருக்குள்ளே யுறைந்தாண்டி

தேவதத்தன் போலே தாண்டி
ஜீவனே ஈச னென்றாண்டி
நாறுபுஷ்பரஸம் தாண்டி
றுட்டில் சேர்ந்தாப்போலேதாண்டி

ஜீவன் ப்ரம்மத்திலே தாண்டி
சேர்ந்தால் திரும்பாய் என்றாண்டி
இன்ன புஷ்ப ரஸ மென்று தாண்டி
என்றுமெடுக்கவே கூடாதென்றாண்டி

ஜாதிபேதத்தை தாண்டி
ஸமரஸ மாக்கி விட்டாண்டி
வடவிருக்ஷத்தின் கீழே தாண்டி
அவன் ஸாதுபோ லிருந்தாண்டி

அனிருத ஜட துக்கம்போக்கி வைத்தாண்டி
ஸத்துசித்து மயமாக்கி விட்டாண்டி
பண்டிதன்போலே வந்தாண்டி
அவன் பக்கிரிகொண்டு வந்தாண்டி

எங்கெந்த வியாதியும் தாண்டி
நானில்லாதே போக்கி வைப்பே னென்றாண்டி
ஸம்ஸார வியாதியை தாண்டி
அவன் தாது பரிக்ஷைபார்த்தாண்டி

வெகு நாளை ரோக மென்றாண்டி
அதர்க்கு போத குளிகை தந்தாண்டி
பத்தியம் காத்திரு என்றாண்டி
சற்றும் பாமராளாகா தென்றாண்டி

ஸத்ஸங்கம் கூட்டிக்கொள் ளென்றாண்டி
அதுதானே குணமாகு மென்றாண்டி
குருநாதன் சொல்படி தாண்டி
கடும்பத்தியமே யிருந்தேண்டி

அஞ்ஞான வியாதிபோய் தாண்டி
அபரோக்ஷ திட மாகினேண்டி
த்வைதமென்னும் பேயை தாண்டி
தூரத் [illegible] ட்டாண்டி

மணிமந்திரம் போதித்தாண்டி
நல்ல மந்திரவாதியிவன் தாண்டி
விருத்தி வாஸனைகளை தாண்டி
சற்றும் தோன்றவிடாமலே யடித்தாண்டி

அத்வைத வெளியிலே தாண்டி
அம்பரம் போலாகினேனண்டி
கர்ம ஸாகரத்தை தாண்டி
கன்றுகுளம்புபோல் தாண்டவைத்தாண்டி

தர்மாதர்மத்தை தாண்டி
சற்றும் ஸாரமில்லை என்றுண்டி
லோகாதி லோகத்தை தாண்டி
நொறுங்கவே பார்த்துவிட்டாண்டி

போகாதிகள் பொய்பொய் யென்றுண்டி
பரிபூர்ணானந்தம் மெய்மெய் யென்றுண்டி
துக்க ஸாகரத்தை தாண்டி
தூரவே யிரைத்து விட்டாண்டி

ஸச்சிதானந்த வெள்ளத்தைதாண்டி
அவன் தாக்கியே தேக்கிவிட்டாண்டி
சரீரம் மூன்றிலும் தாண்டி
உனக்கு ஸம்மந்தமில்லை என்றுண்டி

அதை விசாரிக்கும்போது தாண்டி
அதற்குள் ஸாக்ஷியா யிருந்தேன்டி
அவஸ்தை மூன்றிலும் தாண்டி
உனக்கபிமான மில்லை என்றுண்டி

அதை யாருய்ந்து பார்க்கும்போது நான் தாண்டி
அதற்கப்புரமா யிருந்தேண்டி
பஞ்சபூதங்களை தாண்டி
பதரவே பார்த்துவிட்டாண்டி

கோசபாவனை போய் தாண்டி
கூடஸ்த ப்ரம்ம மானேனண்டி
பஞ்சதந்மாத்திரயை தாண்டி
பதரவே யடித்து விட்டாண்டி

என்சொல்வேன் என்சொல்வேனாண்டி
இவனெங்கே யிருந்து வந்தாண்டி
இன்னமின்னம் ஜன்மம்தாண்டி
எடுக்கவே என்றிருந்தேண்டி

இதைவிசாரித்தால் தாண்டி
ஜன்மத்துக் கேதுவில்லை என்றாண்டி
பஞ்சகோசங்களை தாண்டி
அடுக்கோடே சாய்த்துவிட்டாண்டி

ஈவிதிரக்கம் காணேனண்டி
இவனை என்னமாய் நம்பபோறேண்டி
தேசாதி தேசமெங்கும் தாண்டி
தேடிதிரியாதே என்றாண்டி

த்சமணைபோலே தாண்டி
சற்றே யறிந்துகொள் ளென்றாண்டி
சிலகால மாகவே தாண்டி
இதுஜீவனே என்றிருந்தேண்டி

அளிவாக்கியம் ஒன்றாலே தாண்டி
ஐக்கியமாய் சேர்த்துவிட்டாண்டி
பதினாறு பேர்களை தாண்டி
படையோடே சரித்துவிட்டாண்டி

தனியே யிருத்தி வைத்தாண்டி
அந்த ஸாகஸமென்ன சொல்வேண்டி
ஷண்மத வாதிகளை தாண்டி
அவன் தன் வசமாக்கிக் கொள்வாண்டி

ஆறுவைரியை தாண்டி
அண்டவிடாம வடித்தாண்டி
தாறுமாறுக்காரன் தாண்டி
துரீய நிலையை தந்தாண்டி

காமக்ரோதாதிகளை தாண்டி
காறுவாறு தொடுத்தாண்டி
தொண்ணூற்றாறுபேரை தாண்டி
துண்டித்து போட்டுவிட்டாண்டி

எத்தனை காலமோ தாண்டி
எனக்கென்று பாடுபட்டேண்டி
அதைத் விஷமமாக்கினுண்டி
அகர்த்தனுக்கி விட்டாண்டி

வெகுவான போகத்தை தாண்டி
புசிக்கவே என்றிருந்தேண்டி
பார்வை யொன்றினுலே தாண்டி
போகத்தை மாற்றியே வைத்தாண்டி

பார்த்தயிடமெல்லாம் தாண்டி
பரிபூர்ணமாய் தோற்றி வைத்தாண்டி
வார்த்தைகளொன்றும் காணேண்டி
மௌனமதாக்கி விட்டாண்டி

மரத்துக்குள்ளே ஆனை தாண்டி
மறைத்தொளித்தா போலேதாண்டி
பரத்துக்குள்ளே தாண்டி
துலங்கவே பார்த்துவிட்டாண்டி

மண்ணுக்குள்ளே பூதம்தாண்டி
ஒருமித்திருந்தா போலேதாண்டி
தன்னுக்குள்ளே தாண்டி
ஸாபல்லிய மாக்கி விட்டாண்டி

பூஷணம் பொன்னிலே தாண்டி
வெகுவிதமானுப் போலேதாண்டி
என்னுக்குள்ளே என்னை தாண்டி
ஏகமய மாக்கினுண்டி

ஏகாந்த ஸ்தலத்திலே தாண்டி
அவன் எப்போதும்போ லாக்கினுண்டி
ஸச்சிதாந்த மஞ்சத்தில் தாண்டி
தூங்காமல் தூங்கவைத்தாண்டி

அத்வைத ஆண்டியை தாண்டி
அதைகற்ரோரும் கேட்டோரும் தாண்டி
சித்ரூபமாவா ரென்றுண்டி
திரும்ப ஜனியா ரென்றுண்டி.

## பூர்ண ரஸ கீர்த்தனை

(ராகம்-ஸாவேரி)

பல்லவி

ஆசையானேன் வெங்கடேச ஸ்வாமிமேலாசை
ஆனேனே

அனுபல்லவி

ஆசையானேன் அவருடைய லீலையை தேசமெங்கும்
தேடியும் காணேன் கோசபஞ்சக மேல்விளையாடும்
வரதவெங்கடேச நாதன்மே லாசையானேன். (ஆசை)

சரணம்

அகமுருகுதடி பெண்ணே மோகம் பெருகுதடி ஒருவகை
யாக வருகுதடி தேகஸாக்ஷியானவன் ஸரஸ
மனேகமாமதை என்னசொல்வேண்டி போகபோக்ய ஸாதன
சித்கனபோத மாகிய ரதிவிலாஸன்மே லாசையா (ஆசை)

அடுத்த நாயகன்வந்து என்னை பிடித்தநாள்முதலாய் மானம்
கெடுத்த கலவியிலே மனம் பிடித்தமாகுதடி
படுத்தவுடனிது கடுத்துக்கொண்டு உடுத்ததுகில்தன்னை
விடுத்து அடுத்தவேளையி லானந்தாமிருதம் குடித்து (ஆசை)

என்னுள்ளம் குமுறுதடி பெண்ணே கடத்துக்குள்
வான்போலே ஜடத்துக்குள்ளே சிதாகாசத்தை கண்டேன்
தன்னையும் தானவன் கண்டுபடர்ந்த லீலைகள் செய்யும
வன்மேல் மோகமதாகினேன் அடியே பெண்ணே (ஆசை)

---

(ராகம்-நாதநாமகிரியை)

பல்லவி

மனது பூர்ணமாச்சுதே ஸ்வாமி நாதா
மனது பூர்ணமாச்சுதே

(மன)

அனுபல்லவி

ஸத்குருநாதா தானதுபாக்கிய மென்றெண்ணி
ஜனபண்ணிஸ்வாமி



...நீயோ

(மன)

சரணம்

என்ன காரியமிருந்தாலும் எவர்பலர் பலதுசொன்னாலும்
அந்தமாயாத் தீயைவிட்டு ஆத்ம நிலையை தொட்டு
உடல்கரணமிருந்தாலும் உபாதிகள் பலவானாலும்
கண்விழி தன்னை மூடி கேவல ஆத்மாவில்கூடி (மன)

காரணகாரியங்கள் தெரிந்தும் காமக்ரோதங்கள் பிரிந்தும்
மீறிமகிழ்ந்து ஆனந்தத்தால் மேவுமகம்பதத்தில்
நாருமுடலை நம்பாமல் நல்வினைசெய்து வெம்பாமல்
ஆருவிகாரங்களற்று ஆனந்தத்தில் கூடி வெங்கடேச
சித்ஸ்வரூபமாகியே (மன)

---

(ராகம்-பூபாளம்)

பல்லவி

மழையைப் போலவே மகத்துகள்
மகாவாக்கியமாகவே பொழிகிருள் (மழை)

அனுபல்லவி

மரிச்சு உபகாரம் பண்ண பூமியில் வளைத்து வந்தாலும்
கிடைக்கவில்லை என்னைத் தவிர வேறில்லை (மழை)

சரணம்

பத்திரமானாலும் பரித்தர்ச்சிக்க பாவனை பண்ண மனதில்லை
எண்ணமற்றதோர் சுத்தவெளி தன்னிலிருந்து
நமஸ்காரம் பண்ணினேன் (மழை)

ப்ரஞ்ஞா சைதன்ய மந்தக் கரணத்தில் ப்ரதிபலித்த
சிதாபாஸனும் சித்ஜட கிரெந்திபோல் கூடியே
கருதியே ஜீவன் சேர்ந்தன்யோன்யம் ஸ்திரமாச்சே (மழை)

தப்தாயப் பிண்டம்போல் கூடியே கருதியே
ஜீவனுருதியாய் அகமென்னும் ஸ்தூலதேகத்தை
யபிமானிப்பதும் பொய்தானே (மழை)

கஷ்டமானதோர் த்வைத விருத்தியை கடந்து
அப்புரப்பட்டபின் இப்படமானதோர் ஸமாதி
விருத்தியுமிழந்து அந்தரமானபின் (மழை)

சிரேஷ்டமானதோ ரகண்டவிருத்தியால்
தகித்து த்ருபுடியு மற்றபின் இஷ்டமானதோர்
சுத்தவெளி தன்னிலிருந்து ஸர்வமும் நாசமாய் போனபின்
(மனை)

ஜோதியாய் ஸ்வயமாய் விளங்கிய சுத்த சைதன்ய
மானபின் ஏகமானதோர் ஸ்வயஞானத்தால்
எண்ணம் மனது அற்றுபோனபின் (மனை)

ஸ்ரீமத்வெங்கடேசர் கிருபையினாலே ஜகத்து
நாசமென்றறிந்தபின் நேதிநேதி வாக்கியத்தால்
நிகிலப்ரபஞ்சமும் நிகிருஷ்டமாய் போனபின் (மனை)

---

(ராகம்-ஆனந்தபைரவி)

பல்லவி

பரிபூர்ணானந்த சுகம்தந்த குருநாதா
பவக்கடலைத் தீர்த்து வைத்தீர் வெங்கடேசா (பரி)

அனுபல்லவி

ஹரிஹர ப்ரம்மாதியுடன் அண்டமெல்லா மேகமென்று
திருடம் சொல்லி என்னை யழைத்து எனது வலச்செவியில்
அஸிவாக்கியத்தை யுபதேசித்தீர் (பரி)

சரணம்

ஆகாச மலரதுபோல் அகிலம் தன்னையுரைத்தீர்
ஸாகாஸத்துணிவதனால் ஜன்மம்தன்னை துலைத்தீர்
மோகாந்தகாரம் நிக்கி முக்திதன்னை கொடுத்தீர்
ஏகாந்த வெளிதன்னிலே எப்போது மிருத்திவைத்தீர்
இன்னமுண்டோ ஸ்வாமி இன்னமுண்டோ அன்றபயம்
சொன்னதை கேட்டபின்பு (பரி)

கல்பனையால் காண்பதெல்லாம் கருத்துக்குள்ளே தானே
கானல்ஜலம்போல் கண்டுகளித்திருக்கலானேன்
அல்பமிந்த மனுஷியரென்று அறிந்துகொள்ளலானேன்
யாருக்குள்ளே அடங்குமிந்த அவனிக்குள் தானே
ஸ்வப்னமாய் கண்டதெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தாலும்
சோகமுண்டோ மோகமுண்டோ தாபமுண்டோ
தன்மயமானபின்



---

(பரி)

(ராகம்-ஆனந்தபைரவி)

பல்லவி

சோற்று துருத்தியை சுமந்து சோகமேன்படுகிறாய்
சும்மாசும்மா சோகமேன் படுகிறாய் (சோற்)

அனுபல்லவி

ஆத்மவடிவு நியல்லவோ அண்டமெல்லா மறிவாக
நிற்கும்அண்ட பரிபூர்ணனென நானறிவேனிந்த (சோற்)

சரணம்

நாற்றமலத்தினால் சேர்த்த பாண்ட மிது ஆத்மாவாகுமோ
புழுநெளியு முளுத்த சட்லத்தை தேர்த்தினாலாகுமோ
காற்றுத்துருத்தியை மாத்த கூற்றுவன் காத்திருக்கானிதோ
வேற்றுமையாகவேபார்த்துக்கொண்டால் நல்லக்ஷேத்திரமாகு
[வாய்
(சோற்)

சோகமும் பசிதாகமும் சுகபோகமு முனக்குண்டோ
அதிமோகத்தா லெனக்காகு மென்று ஊகித்தா லுமுண்டோ
நாஹம்தேஹம் சிவோஹமென்றறிந்தபின் நல்லறிவைக் கண்டுட
[னே
அதுசொல்லிக் கொள்ளாமலே போய்விடுமிந்த (சோற்)

பிறந்ததும் பிறந்திளைத்திருந்தது மறிந்து என்ன ஆகுமோ
உள்ளம்கை தன்னில் புண்ணிருந்துகாண கண்ணாடி வேணுமோ
மரந்த சுஷுப்தி மரந்தகாயத்தால் மாயத்தியால் வந்த
காயத்தி லென்ன பேதத்தை யகற்றுமுபாயத்தினா லிந்த (சோற்)

உடுத்த துகில்தன்னை விடுத்துவேறு நீ எடுத்து தரித்தாப்போல்
தொடுத்த கர்மத்தை யடுத்துவந்தால் ஜடத்துக்குள்ளன்யமோ
கடத்துக்குள் வெளிபோலறிவேனே தர்ம முனக்கில்லை
வர்மமரிய துஷ்கர்மமெல்லாம் வெகு துர்மதியாகுது (சோற்)

வெங்கடேசர் எங்கள் குரு குணம் ஸங்கரகிதரைப்போல்
அங்கமெல்லா மெங்கும் மேனிபோல் பூர்ணமாய்
மங்களமாய் உன்னை யறிந்திடமான மிதென்னடா
தானதுவாக தனதாக அனாதியே (சோற்)

## ஞான அம்மானை

அம்மானை அம்மானை ஆடுவேனம்மானை
யாரைப்பாடி ஆடுவேன் அம்மானை
ஸர்வத்ர பூதாத்ம ஸாக்ஷிக்கும் ஸாக்ஷியதாய்
சாந்தநரஸிம்மரென்னும் ஸத்குருவை நான்பாடி
ஸாம்பவியை ஸித்திவிநாயகரை முன்னிட்டு
ஸத்குருவை நான்பாடி ஆடுவேனம்மானை

ஏந்திளநிந்தாட என்னாவில் வந்திருந்து
ஸாந்நித்தியமாயெனக்கு நான்நினைத்த காரியங்கள்
ஸாதித்து தாடியம்மா தாயேபராபரையே
படைப்பேன்நான் பாற்குழம்பும் பானகமும் பாயஸமும்
வடைப்பருப்பும் மோதகமும் வற்கமாய்பலாச்சுளையும்
எடுத்துப்படைப்போன் இதுஸமயம் உன்றனுக்கு

உன்னைப்போல் என்தனுக்கு உதவிசெய்வாராருமில்லை
பாடுதற்கு முன்னிடத்தில் பழுதுகுறை வராமல்
நிறைவேற்றிவை தாயே என்தன் மனோன்மணியே
அபத்தமதிருந்தால் அறிந்த மஹாத்மாக்கள் மா.
பிழைஇன்னதென்று சொல்லிபொருத்தருள வேண்டுமம்

### நூல்

மூலத்துக்குள்ளே முளைத்து முளைஎழும்பி
மாயை யதுவாகி மறித்து பரிணமித்து
ஸகல ஜகத்தையும் தெரியவிடாமல் மறைத்து
அஞ்சு பூதங்களென்றும் பஞ்சவர்ணத்தா விளைத்து
கருப்பாய் சிவப்பாய் களங்கமற்ற வெள்ளையுமாய்
மூன்றுகுணமாய் சமைந்த மூர்த்தமுள்ள அம்மானை

ஆதியிலே யுண்டான அம்மானை காணுமிது
சராசரமத்தனையும் தாமாய் நிறைந்துகொண்டு
பிரளயமதுவந்தால் பழையபடி ஒடுங்கி
மகத்வமென்னும் நல்ல மதத்தான பேழையில்
வைத்திட்டு தாள்பூட்டி வைத்திருக்குமம்மானை

ஸ்ருஷ்டி ஸமயம்வந்தால் திரும்பி பரிணமிக்கும்
வேளையதுவந்தால் விச்ரிப்பிக்கு மம்மானை
மாணிக்க பேழை வருகவருக இங்கே
வைபோக பேழை வருகவருக இங்கே
யாரறிவாள் அம்மானை யாரறிவாளம்மானை

அஞ்ஞான ஜனங்களுக்காடவும் கூடாது
அந்தக்கரணம் தெளியாராடவும் மாட்டார்கள்
பாமரர்களாலே யிதை பார்க்கவும் கூடாது
பரிபக்வங்களாகி பழையமலங் கழித்து
சித்தம் தெளிந்தார் தெரிந்தாடு மம்மானை

சிவதத்வங்களறிந்தார் தாமாடும்மம்மானை
பச்சைமரத்தில் பணிந்திருக்கு மாணிபோல்
எங்கள் குருபக்தியிடைவிடாமலே யிருக்கும்
அந்தஜனங்கள் எடுத்தாடு மம்மானை
எங்கள்குரு வம்சமெடுத்தாடு மம்மானை

ஈஷணைகள் விட்டு ராகத்வேஷ மொழிந்து
தீரவைராக்ய பக்தியுள்ளாள் திடமதியாள்
ஸாதனங்களுள்ளாள் சமத்தயவ ளொருத்தி
தத்வபேழை தன்னை தைய நல்லாள்தான் திரந்தாள்
அம்மானை தானிருக்கும் அறையையவள் பார்த்தாள்

பார்த்தாள் பிரமித்தாள் பரிசிழந்து மெய்சோர்ந்தாள்
நானுட அறிவேனோ இடையில் தவரிடுமோ
பாடஅறிவேனோ பரிசிழந்து நிற்பேனோ
ஏந்தஅறிவேனோ இடையில் தவரிடுமோ
பரமஹம்ஸர் நம்மை பரிகாஸம் பண்ணுவரோ

ஸ்வரூபமில்லை கண்டார்க்கு தோற்று கிடப்பேனோ
கர்மியுமன்று கரைகடந்த ஞானியுமன்று
இரண்டும் கெட்டாளென்று நிஷித்த முரைப்பாளோ
நாலுவிதமாய் ஜகத்தில் நஷ்டமாய் போவேனோ
நானுமதிலே ஒருவளது ஆகாமல்
திடானுபவம் அளிப்பீர் தேசிகரே


நாலுவித மேதென்றால் நானிப்போ சொல்லுகிறேன்
வேதாந்த சிரவணம் பண்ணும் விவேகமுள்ள கூட்டத்தில்

தானுமவந்து கூடவிருந்து தலைவணங்கி தெண்டனிட்டு
ஸாதன ஸம்பன்னர்போல் தானும்வந்து கூடயிருந்து
தானுமறிவான்போல் தலையசைத்துக்கொண்டாடி
மகிமையுள்ள வேதாந்தம் மனத்தென்றறிந்துகொண்டு
தேசிகரையும் சாஸ்திரத்தையும் தெருவிலே போய்தூற்றும்
அஞ்ஞானியோடு போய்தூற்றும் ஆகாதுஎன்பாளோ
பொல்லாருடன் போய் தூற்றும் பொல்லாது என்பாளோ

பதிகடந்து மங்கையர்கள் பரபுருஷன் தேடுவர்போல்
ஸ்வய குருவைவிட்டு தேசாந்திரம்போயலைந்து
உபதேச கர்த்தாவை ஒருநாளுமறியாமல்
ஸாதனமும் ஸத்குருவும் ஸந்ததமும் வேண்டாமல்
எங்கெங்கும் வேதாந்தி இருக்குமிட மாருய்ந்து
அங்கங்கே போயிருந்தவர்கள் சொல்லை தான்கேட்டு
சப்ததன் மாத்திரயை யுத்தியினுல் கிரகித்து
யதார்த்த மறியாமல் ஏதாகிலுமுளறி
சிலாகிக்கவேண்டி படித்த வித்தை யென்பாளோ

ப்ரதிஷ்டார்த்தமாக படித்தார்க ளென்பாளோ
பலமில்லை என்று பரமஹம்ஸ ரேசுவரோ
சிலகாலம் மெய்யரைப்போல் சுச்ருஷை பண்ணிவந்து
தானும் சில கள்ளரைப்போல் தஸ்கரித்த வித்தை எல்லாம்
அறிவேன்நானென்று அகமே இருமாந்து
வாய்ஜம்பமே யொழிய மனஸி லிரக்கமற்று
வயருவளர்க்க உபாயமிது என்பாளோ
உதரம் வளர்க்க உபாயமிது என்பாளோ
ஆத்மானுபவ மறியாதா ரென்பாளோ

வேண்டும் வேடம்பூண்டு மேனிஎல்லாம் நீறணிந்து
கரைகடந்த யோகியர்போல் கண்ணை யிருகவிட்டு
சிவனை யறிவார்போல் சிவோகம் சிவோகமென்று
இவனைபோல் வேதாந்தி உலகிலில்லை என்று
அனைவரும் தன்னைவந்து அடிபணிய வேணுமென்று
ஸகலரும் தன்னுடைய தாள்பணிய வேணுமென்று
போஜ்யங்கள் பண்ணி தம்மை பூஜிக்க வேணுமென்று
பூஜார்த்தமாக படித்தவித்தை என்பாளோ
பூர்ணவகை காணுமல் புலம்புரு ளென்பாளோ

ஜாவிப்போ சொன்ன வகை நாலையும் தள்ளிவிட்டு
ஸாதனமும் ஸத்குருவும் ஸந்தநமும் கொண்டாடி
ப்ரதிபந்தரகிதருமாய் படித்து வேதாந்தத்தினுல்
சிரவண மனன நிதித்யாஸனத்திலேகூடி
அம்தேகமென்னு மஸம்பாவனை மரந்து

ஹம்ஸோகமென்று மதுதிருடமாக
ஆத்மாநுபவ மறிந்தே க்ருதார்த்தருமாய்
ஸச்சிதானந்த வஸ்து தாமென்றறிந்து கொண்டு
அத்வைதானந்தருமா யகண்டபரிபூர்ணருமாய்
சிதேகரஸானந்த ஜீவன்முக்தி யாஸனத்தில்
அந்த பதத்திலே அமைத்திடுவா யம்பிகையே

இந்த பதவி எனக்கருளு மென்குருவே
இந்த தத்வ ஸாகரத்தை நீந்தியரிவேனோ
கைநீச்சாய் நீஞ்சிகரை ஏறவல்லமையோ
ஸத்குருவின் பாதமலர் தெப்பமது உண்டானுல்
கண்சிமிட்டும் பொழுதில் கடந்து கரைகாண்பேனே-நான்

குறிகண்டாப்போலே உதிக்கென்ற தென்மனஸில்
ஆனபடியாகிரதென்று அம்மானையாட எடுத்தாள்
அம்பாள் சரணமென் றம்மானை சென்றெடுத்தாள்
குருகிருபையாகிர குளிர்ந்த மலர்பொய்கையிலே
மங்களஸ்நாநவகை பண்ணியந்த மாதவத்தாள்

மஙிடுவளர்த்தாத்தி மயிர்முடித்து பின்போட்டு
சுத்தவெள்ளை பட்டுடுத்தி துய்யவெள்ளை நீறணிந்து
தைரியமாகவே சதுரமுத்து மண்டபத்தில்
ஆருஸமாதி என்னு மாஸனத்தின்மே லிருந்தாள்

குருபாத பூஜையை குறையறவே நடத்தி
அம்பிகைக்கும் சங்கரர்க்கும் ஆருதனங்கள் பண்ணி
ஜயபத்திரி என்னும் பூவை செவியிலெடுத்து வைத்தாள்
க்ரூர ஜனங்களுடன் கூடியிணங்காதே
எந்திழையாள் மோகமுடனிணங்கி திரியாதே
க்ஷமைஎன்னும் நல்ல ஸ்தன உத்தரியம் தானுடுத்தாள்

இடையிலிருக்கி கச்சை யிசைத்தாளழகாக
அம்மானையாடுமவ ளழகை கூறவென்றால்
ஆயிரநாவுள்ள அனந்தனுக்கும் கூடாது
ஸத்குருபாத மலர் தூளிதலைக் கழகாய்

சந்திரப்ரபை சுட்டி சரங்களறு வண்டசைய
சுத்தார்த்தம் கேட்கும் சுருள் குழலா ளவள்காதில்
கட்டிமுத்து தோடு கொப்புகம்பிகலகலென

கண்ணாடிபோலே கபோல மிருபுரமும்
ரெத்னமணிகுண்டலங்கள் நின்று நிழல்காட்ட
மறுவற்ற சந்திரனை வசைசொல்லி ஏசுமாப்போல்
மதியொத்த வான்முகமும் மந்தகாஸத்துடனசைய
பூரித்தவான் முகத்தில் புனுகுமணமிலங்க

வையகம் பதினாலும் மத்தித்து சாந்தாக்கி
இளம்பிறைபோல் நெற்றியிலே யிட்டாள் திலகமதாய்
பச்சைஇலை தாமரையில் பனிநீர் திவலைகள் போல்
முத்துமுத்தாக முகமண்டலம் வேர்க்க
ஆனந்தமாகவே யடைக்காய் சுருளடக்கி

பதபதார்த்த மமைத்து பாடும் கனிவாய்தான்
சிப்பிமுத்து ஸம்புடம்போல் சற்றே முறுவலிட்டு
தெத்திட்ட பல்லும் திக்கெட்டும் நிலவெரிக்க
ஸஜ்ஜனங்கள் கூட்டுரவுமுன்னும் ஸரப்பளிதான்
கண்டஸரமும் கனத்த முத்து மாலைகளும்
ஒளிபரந்த ரெட்டைகளும் ருத்திருக்ஷ மாலைகளும்

பருத்தகொடியும் பவழ வடமுடனே
பாரிஸ்தனத்தில் பதக்கம் துவண்டசைய
குலதேவதைக்கும் குலஜனங்கள் யாவருக்கும்
கைங்கர்யம் பண்ணுமிந்த கட்டழகி கைதலத்தில்
அடுக்குவளை நல்பவழம் அஸ்தகடகம் விளங்க

யிறுக்கியிட்ட பொன்னாழி எத்திசையும் ஜோதியிட
ஜகத்திலுண்டான சப்தவகைக ளெல்லாம்
அல்லவென்று பேசி கலகலவென் றம்மானை
போடுபோடம்மானை பொன்வளை கையால் பரிக்க
மாணிக்க வாழ்முகத்தாள் மனதிலொன்று எண்ணுவளா

அரனார்கிருபையோ அடிநாளை புண்ணியமோ
ாம்
பூர்வீகம் தான்செய்த பூஜாபலன் தானோ
மகத்துக்களும் நம்முடைய மாளிகைக்கு வந்ததுண்டோ
ப்ரம்ம நிஷ்டாள் தங்களையும் பூஜைகள் செய்தோமோ
ப்ரம்ம நிஷ்டாள் கையில் பொன்னைரொம்பயீந்தோமோ
யார்செய்த நற்றவமோ அம்மானை இவ்வகை யறிந்தோம்

ஆனந்த மிஞ்சிவிட அங்கம் புளகிதமாய்
ஆதரித்துவிட்டது அங்கப்பணிக ளெல்லாம்
பூரித்துவிட்டது பொன்னணிந்த தன் தோள்கள்
ஏகாந்தமாகி யிருந்தாடும் வேளையிலே

ஈஷணைகள் வந்து யிடுக்கே தடுத்தாலும்
வாஸனைகள் வந்து மறித்தாணையிட்டாலும்
தாபத்திரயம் வந்து சண்டைபண்ணி விட்டாலும்
காமக்ரோதம் வந்து கட்டிப்பிடித்தாலும்
அகங்காரம் வந்து அழவே துவக்கினாலும்
ப்ரதிபந்தம்வந்து·பரித்தெரிந்து போட்டாலும்

கோபமதுவந்தாலும் குற்றமென் றெண்ணாமல்
ஸ்வபாவமதா யெண்ணி ஸகித்துமதை தள்ளியவள்
யாரேதுசொன்னாலு மிவள் செவியிலேறாதாம்
பாஹ்யத்தில் போகின்ற மனதையவள் திருப்பி
அந்தரத்தில் கொண்டு சென்றாள் அந்தர் முகமானாள்

அம்மானை போகின்ற நிலையே குறிபார்த்தாள்
அறிவென்ற மான்முழிகள் ஆகாயத்தில் சுழல
மான்விழிக ளம்மானையுடன் வாதுபண்ணி பூசலிட
ஆனந்தபாஷ்ப மடித்து கரைபுரள
அஞ்ஞானமென்னும் அஞ்சனங்கள் தானழிந்து

மெய்ஞான சக்ஷுஸ் மேனோக்கியே சுழல
ஆடத்தொடுத்தாளே யாருக்கும் நிகரில்லாதாள்
பாடத்தொடுத்தாளே பவழக்கனிவாய்திறந்து
முக்குணமாமம்மானை மூன்றுவர்ணமாக வென்றால்
இவ்வணங்கை வெண்விழியை எத்துடனே ஒப்பிடலாம்

கரந்தபாற் கொப்பிடலாங் கட்டழகி வெண்விழியை
கடைக்கண் சிவப்போடு கரிவிழிகள் நின்றாட
நெற்றிபிறையாட நேரே எதிராட
கொப்பு நிழலாட கூடே எதிராட
மாது முகமாட வாதுபண்ணி தானாட

சரிந்து ஸ்தனமாட தானுமெதிராட
தான் பாடியாட உத்தரியமுடனாட
ஸத்திய லோகம் கேட்டு தானுமுடனாட
கொம்புகிளிபோலே கோவைக்கனிவாய் திறந்து

கூவும்குயில் போலே பாடி யிவளாட
தாமாது அம்மானை தானும் கலகலவென்னும்
சினத்து மெறிவாள் திரும்பிவந்து கையில்விழும்
மறித்துமெறிவாள் வணங்கிவந்து கையில்விழும்
அந்தரத்தே போயொளிக்கு மாகாசத்தில் சுழலும்

கண்சிமிட்டும் போதுக்குள் கட்டழகிகையில் விழும்
சினத்துசினத்தெறிய திரும்பவருகிறதும்
மறித்து மறித்தெறிய வணங்கி வருகிறதும்
மாது எறிகிரது மம்மானை வருகிறதும்
இவ்வகையிரண்டையு மெத்தோ டொப்பிடலாம்

ஸரஸபுருஷன் சருவ வருகையிலே
சிக்கனவே தள்ளி சினத்தகல நின்றாலும்
மன்மத பரவசத்தால் சருவவருவான் போல்
சட்டை பண்ணுமல் சருவவருவான் போல்
கடுத்துகடுத்து முகத்தை விடுவிடென்று சொன்னாலும்
நயந்துநயந்துபேசி நகைத்து நகைசெய்வான்போல்
இவ்வகைக் கொக்குமென்று எந்தனுக்குத் தோன்றுவது
இந்தவகையாக யிவ்வழகை வர்ணித்தாள்

இளங் கோகிலம்போலே யிவள்பாடி யாடுவதை
தும்புருவின் வீணை சுருதிபோல் பாடுவதை
ஸத்திய லோகத்து ஜனங்க ளதுகேட்டு
தெய்வலோகத்து ஸபைகளதறிந்து
பூமியிலேதோ புதுமை தோன்றுகிற தென்று
கடல்போற்றிரண்டு காணவெகு ஆசையுடன்

இந்திரரும் சந்திரரு மீசருடன் விஷ்ணுவும்
தும்புருவும் நாரதரும் சொல்லரிய கின்னரரும்
வசிஷ்டர் யாஞ்ஞ வல்க்யர் சூதர் மகாஜனகர்
ஏற்றமுள்ள ப்ரம்ம நிஷ்டாள் ராஜரிஷி தேவரிஷி
ஸ்வயம்ப்ரபை சூடாலை காச்யபர் மைத்ரேயர்

சபரிஸுசீலையுடன் சங்கையற்ற ஸேனைஎல்லாம்
எள்ளுவிழ யிடமின்றி நின்றது ஸேனை யங்கே
நிற்கவிடமற்று நெருங்கிற்று ஸேனையெல்லாம்
மாயாகுணத்தோடே வாதுபண்ணி பூசலிட
ஆத்மவர்க்கமெல்லா மகிழ்ந்திவள் பாடுவதை

ஒருவரை யொருவர் பார்த்துவமையிட் டேதுசொல்வார்
அஸுரர்களமறர்கள் அறமுனிவ ரந்தணர்கள்
அஷ்டதிக்கு பாலகருமாட வறியார்கள்
ஏகதேசத்திலிருந்த கோவர்தனத்தை
எளிதாக விஷ்ணு எடுத்தாரே யென்றுசொல்லி
அதுவே புதுமை என்று எல்லோரும் சொல்லுவரே

பூமியை சேஷன் பொருத்தே சிரசின்மேல்
தரித்தாரென்று சிலாகித்து சொல்லுவரே
அண்டம் பதினாலு மம்மானையாய் திரண்டு
மூன்றுலோகங்களிந்த முக்குணத்துக்குள் ளொடுங்கி
இருக்கின்றதினாலே எவராலே நாடுவது

மாயா குணத்தின் வகைகண்டா ரொருத்தரில்லை
மகாமோகம் தன்னை வகையறிந்தார் யாருமில்லை
மாதொருத்தி யான்தவிர மற்றொருத்தி யாரறிவாள்
தைய லொருத்தி தவிர தத்வத்தின் கூற்றறியாள்
அருமை அருமை என்று ஆச்சரிய பட்டபேரும்
பூவர்ஷந் தூவி புகழ்ந்தே நமஸ்கரித்தார்

மாதுஜயித்திடுமோ அம்மானை வலுத்திடுமோ
யார்க்கு ஜயமாவதென்று அறிந்திடுவோம் நாமென்று
யிமையோ டிமையை பொருந்தாதே எல்லோரும்
சித்திரத்து பொம்மைபோல் பார்த்தே திகைத்திருந்தார்
ப்ரம்மஸபை தேவஸபை பூமியிலே'யுள்ள ஸபை

இந்த மகா ஸபையை கண்டு மனதில் விசாரமாகி
ஆயிர வருஷந்தான் ஆடினே மானாலும்
மாயை நமக்கு வசமாகப் போவதில்லை
வாணி கிருபைகொண்டு வசைசொல்லி ஏசினால்தான்
மாயை நமக்குவசமாக்கி கொள்ளலாமென்று

ஏசதொடுத்தாளே ஏற்றமுள்ள பெருமாட்டி
அம்மானை உன்னுடைய அடமெல்லாம் நானறிவேன்
அம்மானை உன்னுடைய அடிவேரும் நானறிவேன்
சித்தினிடத்தில் ஜெனித்தாயே அம்மானை
திரைச்சீலைபோலே மறைத்தாயே அம்மானை

ஸத்தைவிட்டு நீயும் தரியாயே அம்மானை
ஆனந்தந்தன்னை அறக்கெடுத்தா யம்மானை

அன்ருத ஜட துக்காத்மா வானுயே அம்மானை
அகடவிகடங்கள் படித்தாயே யம்மானை
அண்டமெல்லாம் கைவசமாய் கொண்டாயே யம்மானை

மூலப்ருகிரதி என்று பேர்பெற்ருயே அம்மானை
முக்குணமு மொன்ருகி முனைத்தெழுந்த அம்மானை
அஞ்சுபூதமாய் பிரிந்தாயே யம்மானை
பஞ்சீகரணமாய் கலந்தாயே யம்மானை
ஆருருதத்துவமா யானுயே யம்மானை

அதுபெருகி தொண்ணூற்ருரு தத்துவமானுயம்மானை
கோஷஜகத்தை யுண்டாக்கினையே யம்மானை
ஓகோகோ அம்மானை யுன் கூத்துரொம்பவுண்டே
சாச்வதரை ஸத்வகுண உபாதியோ டம்மானை
கூட்டிவைத்து கூத்தாட்டம் கொண்டாயே யம்மானை

தத்வத்துக் கப்புரம் நிர்க்கும் நிருபாதியரை
ஸர்வஞ்ஞரென்னு மொரு தாழ்வுரைத்தா யம்மானை
நாமரூபமில்லாத நாசரகிதருக்கு
நாலஞ்சு பேரிட்டழைத்தாயே யம்மானை
அன்யோந்யாத்யாஸம் பண்ணினையே யம்மானை

அயப்பிண்டம் போலே நீயானுயே யம்மானை
முடியாமுடிய கற்ருயே யம்மானை
மும்மூர்த்திகளுக்கும் பேரிட்டாயே யம்மானை
சித்தையும் ஜடத்தையும் கலந்தாயே யம்மானை
சித்ஜடகிரந்தி முடித்தாயே யம்மானை

ஜலத்தில்ப்ரதி பிம்பம் மாயைதா னம்மானை
அந்தக்கரணத்தோ டொன்ருனுயே யம்மானை
சிதாபாஸனென்று மழைத்தாயே யம்மானை
ஸகலத்துக்கும் கர்த்தாவாய் நீயானுயே யம்மானை
ஆசைஎன்னும் பாசவலையிலே யம்மானை
அசைக்கபடாமல் காலையிரக்கினையே யம்மானை

அடிக்கடி ஜனநமரணத்தி லம்மானை
அலைவாய் த்ருணம்போலே யலையவைத்தா யம்மானை
ஸ்வர்க்க நரகமென்றும் கல்பித்தா யம்மானை
ஸுகம்போலே ஸம்ஸாரம் தோன்றவைத்தா யம்மானை
ஆத்மஸ்வரூப விசேஷம்கொண் டம்மானை

அயக்காந்தம்போலே யாடுகிரு யம்மானை
சுத்தஸ்படிக ஸன்னிதானத்திலே யம்மானை
தோற்றும் சிவகுஸும உபாதிபோ லம்மானை
கூடஸ்த ப்ரம்ம குண ரகிதமான வரை
பஞ்சகோசத்தினாலே மரைத்தா யம்மானை

அக்கினியை தூமம் மரைத்தாப்போ லம்மானை
அதிஷ்டானம் தன்னை மரைத்தா யம்மானை
பானுவை மேகம் மரைக்கு மதுபோல
பரமார்த்தம் தன்னை மரைத்தாயே யம்மானை
ஸ்வயம் ஞானம் தன்னை மரைத்தாயே யம்மானை

ஸ்வயம் ப்ரகாசம் கொண்டன்றோ விளங்குகிரு யம்மானை
அண்டரண்ட லோகமெல்லாம் அறியாளே யம்மானை
அறிந்தபே ருன்னை அஸத்தென்பா ளம்மானை
ஆனாலுமங்குஷ்ட ஸ்த்ரீபோ லம்மானை
அறியாதபேரை அமட்டுவா யம்மானை

அறிந்த பேரை கண்டா லஞ்சுவையே யம்மானை
இன்னமின்ன மம்மானை எத்தனையோ யுன்கூத்து
ஸத்தென்று லம்மானை நீதானே உரவாவாய்
அஸத்தென்றால் அம்மானை தானுமதுகூடாது
ஸத்துமஸத்தும் தானுமே கூடாயே
பின்னபின்ன மென்றால் ப்ரம்மவகை யிரண்டாச்சு

அபின்னமென்று லந்தனுக்கு அநேக நாமங்களுண்டோ
பின்னபின்ன மென்றால் பெரியோர் ஸம்மதியார்
ஆமென்று லம்மானை அத்வைத ஹானிவரும்
சொன்னோமே யானால் சுருதிக்கு விரோத முண்டாம்
மிதித்தியமென்று லம்மானை நீயுமன்றோ ஸத்தாவாய்

ஊர்ணநாபி போலே ஈச்வரனார் தம்மிடத்தில்
உபயகாரண மிரண்டு முண்டா யிருக்கையிலே
இத்தனை தோஷங்க ளிருப்பதினா லுன்னிடத்தில்
அன்ருத ஜடதுக்க மென்றறிந்து மகாத்மாக்கள்
சசவிஷாணம் போலே சங்கையற நிச்சயித்து
தள்ளிவிட்டா ருன்னை ஸகல பெரியோரும்

உத்தமமான சுருதிகளு முபநிஷத்தும்
அநுஸ்யூதம் உன்னை அஸத்தே யஸத்தென்று

முக்காலு முன்னை முழுப்பிரட்டு என்று சொல்லி
முக்குகள் தோரும் முறையிட்டு கூவுறது
எங்கள்ஆசார்யரு மப்படியே சொல்லுகிறுர்

எங்களனுபவத்தில் அறிந்துவிட்டோ முன் நடத்தை
ஆகையினு லம்மானை என்னனண்டையிலே நில்லாதே
நிமிஷபோதானுலும் நில்லாதே சொன்னேன் நான்
க்ஷணிகபோதானுலும் தாமஸங்கள் பண்ணுதே
நீலித்தனங்கள் பண்ணி நில்லாதே சொன்னேன்நான்

பண்டு வெகுகாலம் பழகியிருந்ததினுல்
கோடி ஜன்மம் உன்னிடத்தில் கூடியிருந்ததினுல்
இரக்கமாய் சொல்லுகிரே னினிதப்பு அம்மானை
தர்மமாய் சொல்லுகிரேன் தப்பிவிடம்மானை

நேதிநேதி என்று நிக்ரகித்து மாயைதன்னை
கண்டித்து மாயை தன்னைபரிபூர்ணத்தோ டொன்ருக்கி
பாகலெக்ஷணையினு லுபாதி பரிதியாகம்பண்ணி
ஜீவன்பரனேடே சேர்ந்தானே ஐக்கியமாக
நித்யோகம் முக்தோகம் மோக்ஷஸ்வரூபோகம்

நிர்விகல்போகம் நிரதிசயானந் தோகம்
ஸர்வமிதம் ப்ரம்மோகம் தாரகானந்தோகம்
அஸங்கோகமென்று அமர்ந்தாள் ஸமாதியிலே
தன்னியோகமென்று தழைத்தாள் பிரபஞ்சமெல்லாம்
சப்தம் பிறந்தவிடம் ஸகலகலையு மொடுங்கி

ஓமும் ஓடுங்கிவிட்டு உள்புரமும் பூர்ணமதாய்
கல்விகளும் கேள்விகளும் விட்டே கவலையற்று
அஷ்டாங்கயோக அவஸ்தை ஐந்துமொடுங்கி
விட்டேறிப்போனுல் வெளிக்கும் வெளிதன்னிலே
மேலாம்பதத்தில் மௌனநிலை கண்டுகொண்டாள்

## பலன்

அம்மானை சொல்லி அருகிருந்து கேட்டோர்கள்
திரும்பி பிறவாத சித்து மயமாவார்கள்
மரித்தும் பிறவாத வஸ்து மயமாவார்கள்
புனர்சிருஷ்டி யன்னியிலே பூர்ணமயமவார்கள்
ஸத்குருவின் பாதத்திலே சிரத்தை யதிகமதாய்
ஆனந்த ஸாகரத்தில் அமர்ந்திலயமாவார்கள்.

## தெளிவுரை கண்ணி

ஆதியந்த மற்ற ஆசாரியர் கிருபையினுலே
ஆனதும் போனது மன்பாக சொல்வேன் கேட்பாய்

ஆசைக் கயற்றூஞ்சலாடித் திரிந்ததும் போச்சே
அசஞ்சலமான வகண்டஸ்வ ரூபமாச்சே

ஆணென்றும் பெண்ணென்று மலைந்து திரிந்ததும்போச்சே
அசையாமல்ஞானஸ்தலத்தி லிருக்கவுமாச்சே

அனந்த ஜன்மத்துக்கடியிட்டிருந்ததும் போச்சே
அனந்த ஜன்மங்களு மில்லாதிருக்கவு மாச்சே

அந்தகனுலே யதட்டி பயந்ததும் போச்சே
அவஸ்தைமூன்றுக் கப்புரப்பட்டவனு மாச்சே

அகங்கார துக்கமசூயை இடும்புகள் போச்சே
தூங்காமல் தூங்கி சுகமாயிருக்கவு மாச்சே

ஆறுகுளங்களு மாடி திறிந்ததும் போச்சே
அதுவே வடிவாய் ஜடமாயிருக்கவு மாச்சே

அலையில் துரும்புபோலலைந்து திரிந்ததும் போச்சே
அசையாத பருவதம்போ லிருக்கவுமாச்சே

ஜன்மேந்திரியங்கள் ஜரையும் துடர்ந்ததும் போச்சே
ஜகமெல்லாம் சித்துமயமா யிருக்கவுமாச்சே

தான்பிறரென்ற தாழ்த்தி யுயர்த்தியும் போச்சே
சாஸ்திர வேதத்துக்கப் புரப்பட்டவனுச்சே

நாமரூபம் நாமென்றபேரெல்லாம் போச்சே
நான்முகனுலே யறியப்படாதவனுச்சே

நீரில்குளித்ததும் நீரில்களித்ததும் போச்சே
நித்தியநிர்மல ஸ்வரூபமே நானென்பதாச்சே

ஸ்தாவர ஜங்கமம் ஸத்தியமென்பதும் போச்சே
ஸகல லோகங்களுக்கும் சின்மாத்திரம்மிச்சமதாச்சே

பசிக்கிரைதேடி பண்ணுமுபாயங்கள் போச்சே
~~பவ்யங்களுக்குள்ளதும் தானே~~ வருமென்பதாச்சே
என்ன்செய்வோமென் றேக்கம்பிடித்ததும் போச்சே
ஏதேது வந்தாலும் எல்லாம் ஸ்வபாவமுமாச்சே

காமகுரோதாதிகள் காயகிலேசங்கள் போச்சே
காலத்திரயத்திலும் காணாத இன்னவனாச்சே

லோகாதி லோகங்க ளெனக்குள்ளிருந்ததும் போச்சே
ஒன்றுமில்லையென்று தானாயிருக்கவு மாச்சே

சோத்திரங்கள் கல்பிதங்குணங்கள் குடிகளும் போச்சே
குணாதீதமான பரபிரம்மம் நானென்பதாச்சே

இனமும் பிள்ளை நானென்ற பேரெல்லாம் போச்சே
எப்போதும் பிரம்மஸ்வரூபமே நானென்பதாச்சே

வேத்துருவமாக பார்த்து இருந்ததும் போச்சே
வேறொன்று மில்லாமல் தானாயிருக்கவுமாச்சே

புத்திரனால் கதியுண்டென்பதும் போச்சே
புத்திரதாராதி பொய் பூர்ணம் நானென்பதாச்சே

பொய்யை மெய்யென்றெண்ணி போகம் புசித்ததும்போச்சே
மெய்யை மெய்யென்றெண்ணி மெய்யாயிருக்கவுமாச்சே

யஞ்ஞ யாகங்களும் ஏற்றவிதிகளும் போச்சே
யஞ்ஞாதி கர்மங்கள் என்னை பஜிக்கவுமாச்சே

பஞ்சகவ்வியத்தால் பலன்வருமென்பதும் போச்சே
பஞ்சதன்மாத்திரைக்கு பலனாயிருக்கவு மாச்சே

ஜனனமரணம் எனக்குளிருந்ததும் போச்சே
ஜனனமது பொய்யென்று சோதித்திருக்கவு மாச்சே

சந்தை கூட்டம் வாழ்வுதானே மதித்ததும்போச்சே
அந்த கூட்டம்விட்டு ஆனந்தரூபமு மாச்சே

ஸப்தகோடி மந்திரம் சாஸ்திரங்களுள்ளதும்போச்சே
ஸத்துமயமான ஸாக்ஷியே நானென்பதாச்சே

மாயையை உபாஸித்தால்வரு மோக்ஷமென்பதும்போச்சே
மாய்கைக் கதிஷ்டானம் மாயாவி நானென்பதாச்சே

எனக்கெதிராக வெருவாக பார்த்ததும் போச்சே
ஏகமேகமென்று எங்கும் நிறைந்தவராச்சே.

---



## மனம் புத்தி ஸம்வாதம்

தனம்மாதர் மோகம் தன்னை ஸாமான்யமாக பார்த்து
ஸத்குருவின் பாதமலர்சூடி தலைமேல்
மனம்புத்தி மகள் தாயார் மகானுபாவர் சேதிசொல்ல
வாக்தேவிவந்து நன்றாய் எனக்கு துணையாக 1

அன்றிருவர் தேடி ஓடி அடிமுடி காணாத
ஆதிவஸ்து அருகில்வந்து சொன்னதேதன்னே
இன்னும் நம்மை கிருபையினாலீடேற்றவேணுமென்று
எளிதாக ஸேவைதர வந்தார்காண் பின்னே 2

பிரம்மாதி தேவதைகள் பேரறியா பேரறிவு
பேசி வார்த்தை சொல்லி வந்ததேதடி யன்னே
கர்மாதி வாஸனைகள் கட்டுவிட்டபட்டயமாய்
கையும்வாயும் கொண்டு கண்ணான்று பின்னே 3

வற்றாத ஆசைகடல் வற்றிபித்தெழுந்துபோன
மாயமென்னமாயம் சொல்லுமாதாவே யன்னே
கற்றார்கள் வித்தைபோல வன்றிவர் கற்றவித்தை
கடலோ ரோரும் சொன்னேன் கண்ணன்றுபின்னே 4

ஒருக்காலும் வற்றாத உப்புநிற துக்ககடல்
ஒன்றாய் சிதரிபோன தேதடியன்னே
அருக்கணி முயல்கொம்புபோலே ஜகம் மித்யை என்ன
ஆதிகுருதன் கிருபையால் போச்சுது பின்னே 5

ஆனந்த ஸாகரத்திலே துளைந்துவிளையாட
யார்நம்மை கொண்டுவந்து விட்டாள் சொல்லன்னே
மோகாந்த மற்ற குருமொழியின் ஞெளியினாலே
மூழ்கிகரைந்து போகவிட்டது பின்னே 9

நித்யானந்த ஸாகரத்தில் நிரந்தரமாய் துளைய
நிமிஷத்தில் கொண்டுவந்து விட்டதாரன்னே
அத்யாரோப மடவாதம் அற்றிருக்குமாதிவஸ்த்து
ஆலடியில் பார்த்த பார்வை [illegible] பின்னே 7

ஸத்துச் சித்தானந்த ஸர்வாதீத ஸாகரத்தில்
ஸந்ததம் துளையவைத்த தாரடியன்னே
அனந்த ஜடதுக்கமென்னும் அந்தகார காடுவெட்டி
அகண்ட வெளியைக் காட்டிவிட்டது பின்னே

ஸுகதுக்கமான அலை சோகமோக ஸாகரத்தில்
தொடர்ந்து தொடர்ந்தடித்த தெங்கடியன்னே
ஜகம்மித்யை என்று சொல்லி தள்ளிதிடம் தரவந்த
தேசிகரை கண்டு ஒளித்துபோச்சுது பின்னே

இட்டுவிட்ட நாமரூப மெப்படிபோ யெதாச்சு
இதிலொரு திருஷ்டாந்த மெனக்கு சொல்லன்னே
கட்டைமுட்டை காஷ்டபேதம் காட்டுதீயில்கண்டதுண்டே
காலதேச நாமரூபம் கண்டுகொள் பின்னே

அண்டாத ஆத்ம சுக மனுபவித்தே சுகிக்க
யாரிந்த ஆதிக்கத்தை தந்தார் சொல்லன்னே
பண்டாலின் கீழிருந்து பார்தபார்வையும் மொழியும்
பாக்கியத்தை பெயர்த்தெடுத்து தந்ததுபின்னே
ஞானபாக்கிய பாக்கியத்தை பெயர்த்தெடுத்துபின்னே

ஜகத்தெல்லாம் தூங்கும்போது விழித்து ஸஞ்சரிக்க
தயவுபண்ணின குருவை தெரிய சொல்லன்னே
மகத்தான பேர்களோடு தூங்கும்போது விழிக்க
மகானுபாவர் கோபாலர் காரணர்பின்னே

கண்டத்ருசியம் கண்டிடத்தே கண்டிருக்ககாணுதே
கருத்து பொய்யா யொளித்த தெங்கடியன்னே
உண்டென்று கானல் ஜலமோடுவதும் பொய்போல
ஒத்துபார்த்தா லுல்லாஸ புத்புதம்பின்னெ

நித்யதிருப்த்தியாய் நிரைந்து நிருபாதியாய் மகிழ்ந்து
நீயிருக்கும் நேர்த்தி எனக்கு சொல்லுவாயன்னே
போகாந்த திருப்தியிலே போட்டகையை போட்டாபோலே
பூர்ணகிருபையால் நிரைந்தொழிந்தது பின்னே

அஞ்சடக்க முக்தி என்ருகம வேதங்கள் சொல்ல
அத்தனையருமையா வழிந்து சொல்லன்னே

ஞ்சுபோல் பரக்கு மஞ்சை பராபரத்திலே நிறுத்த
க்குவனுக்கே யொழியகூடாது பின்னே 15

ஒந்த பரம்பரையாய் வந்த ஜகபிராந்தியை
ஒழித்து கெடுக்கிற தெப்படி யன்னே
ஸந்தேகங்க ளன்னியிலே ஸத்குருவாக்கியத்தில்
ஸாகஸமாய்த் துணிந்தால் தானே போம்பின்னே 16

முக்திஏது பந்தமேது முன்னும் பின்னு முள்ளதேது
மூன்றுமொன்றிலே காணத்தெரியச் சொல்லன்னே
வ்ருத்தியுதயமே பந்தம் வ்ருத்திநாசமே மோக்ஷம்
விட்டிடலே இருக்கு மெப்போதும் பின்னே 17

ங்கெங்கு மேகரஸமாய் நிரைந்திருக்கிரதை
எவ்விடத்தில் வ்ருத்தி மூன்றிருக்கும் சொல்லன்னே
பொங்கும் கருணை புசிக்க மாட்டாத புத்தியிலே
போக்கழிக்க வனந்த வ்ருத்தி கல்பிக்கும் பின்னே 18

எல்லாவிஷயங்களு மெப்போதும்போல் புசித்து
எனக்கில்லை என்னும் திரமெப்படியன்னே
சொல்லாலும் மனத்தாலும் தோன்றுகிர ஜாக்கிரத்தை
ஸ்வப்நம்போல் நிச்சயித்த துணிவுகாண் பின்னே 19

ஸுஷுப்திபோல் ஜாக்கிரத்திலே யிருக்கும் சுகம்தன்னை
சொல்லலாம்போ லிருந்தால் சொல்லுவாயன்னே
விழித்துறங்கி வ்யவகாரம் பண்ணுகிரவனை விழுங்க
வேணுங்காண் பின்னே யொன்றும் வேண்டாம்காண்
பின்னே 20

ஜாக்கிரத்திலந்தியம் போலும் நித்திரையிலாதி போலும்
ஸஞ்சரித்திருக்கிர தெப்படி யன்னே
பார்த்து கேட்டலைந்த மனம்பற்று விட்டு சித்தாய் போனால்
பதினெட்மடங்கதை போலிருக்கலாம் பின்னே 21

குருவாகி வந்தவனார் சிஷ்யனாகி போனவனார்
கூசாம லெந்தனுக்கு தெரிய சொல்லன்னே
ததுவென்னும் பதம்குரு த்வமென்னும் பதம் சிஷ்யன்
சோதித்தால் சப்தமிரண்டும் சுத்தபொய் பின்னே 22

எங்கும் சராசரங்களாய் நிறைந்திருக்கிறதை
எவ்விடத்தில் ஸத்துசித்திருக்கும் சொல்லன்னே
அங்கங் கதுவதுவாய் அக்னியும் புகையும்போல்
அண்டபிண்ட லோகமெல்லா முண்டாச்சு பின்னே 23

ஸத்துசித்தானந்தத்திலே ஜகந்துண்டான
ஸாகஸ வாச்சரிய மேதடியன்னே
சித்தையும் ஜடத்தையும் நன்ருய் நிரவிசாரித்து பார்த்தால்
தெரியலா மதுவிரண்டும் வெரும்பொய் பின்னே 24

உத்பத்தி லயங்களு மொருக்காலு மற்றிருக்க
உண்டாய் லயிக்கிரது மெப்படியன்னே
கற்பித்தவம்புதியை கடக்காத பேர்களுக்கு
காலும் நூலுமாக மண்டிகற்பிக்கும் பின்னே 25

என்னிடத்திலே யுதித்து என்னைபயமுறுத்தி
எனக்குபயம் தொனித்த தெங்கடியன்னே
தன்னைமறந்தா லுருக்கும் தன்னை யறிந்தாலொளிக்கும்
சற்றேயுற்று பார்த்துநீ ஸந்தோஷிபின்னே 26

கரையில்லா தானந்தம் கண்டவிட மெல்லாம் பெருக
கானல்ஜலம் பானம்பண்ண போவானேன் பின்னே
விலையில்லா நவரத்னம் வேண்டியபடி யிங்கிருக்க
வெரும்கல்லை வேண்டிக் கொள்ள போவார்காண் பின்னே 27

பார்த்தவிட மெல்லாம் பரமாய் பரிபூர்ணமாயிருக்க
பாடுபட்டு தேடும் தெய்வமேது சொல்லன்னே
ஆப்தவாக்கியத்தை கேட்டு அறிவு கண்ணால் விழித்தால்
அப்போது நீசொன்னதுக் கர்த்தமாம்பின்னே 28

ஆதியந்த சூனியருய் அகண்ட பரிபூரணருய்
அறிவேயறிவா யிருந்தலைவானேன் அன்னே
ஜோதியான உள்கண்ணை சுத்தபொய் கொள்ளகுறி
துலங்க பரிகொடுத்த தோஷம்காண் பின்னே 27

மகானுபாவர்க் கிச்சைபோகிறதென்று மகாவிஷ்ணு
தலைமேல் சுமக்கிறது எப்படி யன்னே

தன்னை தானே நாசம்பண்ணி ஸர்வ நியாயியாயிருந்தால்
தலைமேல் சுமக்கிற தருமையோ பின்னே 30

தத்வமஸி என்னும் பத சாஸ்திரகட்டு நழுவ
தாமரைப்பூ கண்ணாலே பார்த்ததாரண்ணே
சித்திரம்போலே ஜகத்தை சித்தமென்னும் படத்திலே
தெரியகாண பண்ணினார் கோபாலர் பின்னே 31

அனந்த உபநிஷத் தாருசாஸ்திர வாகமங்கள்
யாரிடத்தி லுண்டான தறிந்துசொல்லண்ணே
மனம்தன்னிலுள்ள சப்தம் வாக்கினாலும் வசனிக்க
மகாமோக மாய் அனந்த மகாமோகம் பின்னே 32

ஜீவனிருந்தா லன்றோ தேகேந்திரிய விஷயங்கள்
ஜனித்து மறித்தலைய பேசுகிறதண்ணே
பாவனையென்னும் சுருதியுக்தியனுபவம் வந்தவர்க்கு
ஸ்வப்நத்தில் கல்பிதம்போல் தோற்றும்காண் பின்னே 33

ஸ்வதஸ் ஸித்தமாயிருந்து ஸ்வயமாய் விளங்குவதை
சொல்லப்போவதேது வேதசாஸ்திரமண்ணே
சதிபண்ணும் மனமாயை ஸத்குரு வருமுன்னே
தானும் தத்வமஸி என்னும் சாதிக்கும் பின்னே 34

அம்
ஸோகம்ஸ்வரூபமென்று சொல்லத்திருந்த யிடத்தே
சொல்லுகிற தேதுவேதம் சொல்லுவாயண்ணே
அகம்பிரம்மதை என்னும் அவாந்திர கல்பிதத்தால்
அண்டபிண்ட லோகமெல்லா முண்டாச்சு பின்னே 35

அத்தைக் கண்டு தத்வம் மனதிற்குள்ளேபோ யொளித்து
ஆத்மாவை தேடுபவனாவனாரண்ணே
உத்துபார்த்து ஒத்துக்கொள்ள மாட்டாத வகங்காரி
ஊளருபாடா யுபாதிகளை தேடுகிறான் பின்னே 36

பதினாயிரம்கோடி பாஸ்கர வுதயம்போல
பளிச்சென்று தெரியபார்த்த தாரண்ணே
ஹ்ருதயாந்தகாரம் தன்னை எளிதாக வெளியாக்கி
சுடேற்றிவிட்ட ராஜர்கோபாலர் பின்னே 37

ஸ்வர்க்காதி போகம்முதல் த்ருச்யமென்று தள்ளிவிட்ட
சுகத்தை யிதிகாஸத்தை சொல்லுவாயன்னே
ஸ்வர்க்கத்திலிருக்கிறது சுகமென்று சொல்லும் சற்றே
ஸ்வப்நமே ஸ்வர்க்கமென்று சொல்லலாம் பின்னே 38

நாலுவேத ஆகமங்கள் நாதனை கண்டு நடுங்கி
நானுனக்கு சொல்லவில்லை என்கிறதன்னே
கால்தலை யில்லாவிடத்தே கர்ப்பித்த கவடுகண்டு
கண்ணை குற்றித்தள்ளபோரு னென்றஞ்சும் பின்னே 39

பண்டுநாள் பலசுருதி பார்த்துக் கேட்டதாயிருக்க
பரமார்த்தம் நானறியே னென்கிரதே யன்னே
கண்ட சர்க்கரையை கண்கள் கண்டுருசிகாணுத
கண்டகண்களுண்ட ருசி சொல்லுமோ பின்னே 40

அடிநாளே ஆலின் கீழே ஆவரணமெல்லாம்
அடித்து பறித்துக் கொண்டதாரது அன்னே
குடி குலம் குணம் கர்மம் புத்தி சக்தியுள்ளதெல்லாம்
கொள்ளையிட்டு கோலம்கொண்ட கோபாலர் பின்னே 41

ஆகாச சரீர மென் றனுபவித்தே சுருதிகள் சொல்ல
பிருரப்த மங்கீகரித்த தேதயடி யன்னே
ஸாகாஸமாய் துணிந்து தன்னை நாசம்பண்ணறிய
அஸத்துக்கள் புத்திக் கதுநிச்சயம் பின்னே 42

வெட்டார வெளியிலே வெவ்வேருய் தோன்று மெல்லாம்
விஸ்தரித் தெனக்கு நன்ருய் தெரியச் சொல்லன்னே
எட்டாத ஸ்வஸ்வரூபம் எளிதா யிங்கிருக்க
இருக்கும் மாயை முக்குணமும் முன்னறி பின்னே 43

---

உ

மகாகணபதி துணை

# ஆவுடையம்மாள் பாட்டு

## பண்டிதன் கவி

ப்ரளயகாலம் தன்னிலே பரிபூர்ணமான வஸ்து
பரம குருவாய் வந்து என் பவரோகம் போக்கவென்றே
பரம ரகஸ்யத்தை பாங்காகவே யுரைக்க
பழுதுகுரை வாருதே பார்வதியே முன்னடைவீர்

தொப்பகணபதியே தெந்தமுகத்தோனே
விக்ந விநாயகரே மூஷிக வாகனரே
மோதகத்தை கையில் தரித்த கணபதியே சசிவர்ண
நீருமிப்போ சதுர்புஜ முள்ளோரரே சியாமளவர்ண

விளம்பித சூஸ்திர வாமனரூப மகேச்வரனுர் புத்திரரே
மஸ்தக பூஜையிலே மகிழும் தயாளுவே, மண்டையிலே குட்டி
வணங்கி தொழுதோர்க்கு அவர் வினைகள் போக்கி
வரம்கொடுக்கும் வஸ்துவே

ஏகதந்தத்தாலே விளங்கும் முகத்தோனே
பார்வதியாள் திருமகனே பரமேச்வரனுர் புத்திரரே
பண்டாலயிலையில் பள்ளிகொண்டோர் மருமகனே
ஸ்கந்தனுடனே கணபதியே

எனக்கு ஸொந்தமுடனே கலங்காமல் தாருமையா
அப்பம் பொரி அவலும், அதிரஸம் எள்ளுருண்டை
தேன்குழலு மிளநீரும் செங்கரும்பும் மாங்கனியும்
பக்குவமான நல்லபலாப்பழமும் மோதகமும்

முப்பழமும்கூடி முஷியாதே நான்படைப்பேன்
ஸத்குணனுர் லீலைகளை சற்றே தெரிந்துரைக்க
வாணி ஸரஸ்வதியே வாக்கில் வரவேணுமம்மா
மங்களநாயகியே வாக்கில் வந்து முன்னடைவீர்

அபிராமர் ஸுந்தரர் ஆதிகுருவாகவந்து
என்னுர்த்தி தன்னை போக்குதற்க்கு அதிரகஸ்ய மத்தனையும்
சொல்லுகிறேன் நானுனக்கு சோம்பாதே கேள்தோழி
ஜனனமரணமென்னும் தீர்க்கரோகம்பிடித்து

அஞ்ஞானத்தாலே ஆழ்த்தி அஜீர்ணமாய்
பூர்வகர்ம நோய்களெல்லாம உடன்தைபாகவே இருக்கும்
அதிலொன்றி லொன்றுசேராதே உபத்திரவங்கள் பண்ணுருப்
போல்

மகத்ஸேவை யில்லாதே வந்தஇடைஞ்சலுமாய்

ப்ருவிருத்திக்கு நிவிர்த்தி என்றும் பரிதாகம்
தோணுதே ப்ருவிருத்தியுடனே ப்ரபஞ்சத்திலே முழுகி
அனர்த்த பரம்பரையாய் அல்லல்வந்து சேரிடவே
அகங்காரமாகிற அனர்த்த ஜன்னிதான் கிளம்பி

ஈஷணைத்திரயங்களென்றும் வாதபித்த சிலேஷ்மமதாய்
தாபத்தரயமென்றும் தாகமதிகமுண்டாய்
கண்டத்தில் கெட்டிகெத்கெதமாய் விளங்குறுப்போல்
சோகமென்னு மூர்த்வசுவாஸமது கிளம்பிமோகமென்றும்
மூர்ச்சை

அடிக்கடிபோடலுமே நசேந்திரியங்களும் தன்வசமன்னியிலே
விஷயமதுகளால் ஸமயமிதுவென்றறிந்து
ஆசை என்றும் பாசக்கயிற்றால் வரிந்துகொண்டு அதுவசமாய்

படுபிரவேனையிலே பண்டுசெய்த பாக்யெத்தால்
பரனே வடிவாகி சுத்தஸ்வரூபமாய் தனுவெடுத்து எந்தனுக்கு
விகல்பங்களற்று ஸ்வரூபமதுதான் தரித்து
எதிர்ச்சையினலே எழுந்தருளி வந்தார்காண்

அவர்தாமே வடிவெடுத்து தாகமெல்லாம் போக்கவென்று
பவரோகம் போக்க நல்லபண்டிதரும் வந்தார்தான்
தீனதயாபரராய் தயவுடனே கிட்டவந்துநாடி
பரீக்ஷைஎல்லாம் நன்றாகவே பார்த்து பரிவுடனே

குருநாடிகொண்டு முருவலுடனே என்ன சொல்வேன்
அஜீர்ணயாயுண்டான அஞ்ஞான நோய்களிதுவந்த அடையவும்
விசாரிக்க தேவையில்லை சீக்கிரமாக சிந்தைபண்ணி
துவக்கத்திலே தான்வரித்தால் ஸுலபமாய் தீர்ந்துவிடும்

வைராக்யமில்லாதே வந்த அனர்த்தமிது ஸஞ்சிதகர்மமிது
த்வம் த்வமாகவே இருக்கும் அஞ்ஞான [illegible] ...ரமிந்து
[illegible]ற்கிறது

ஜன்மவியாதிபிடித்து அநேக நாளாச்சுது தேகத்தில்
ஆஸ்தை ஸ்திரமாக இருக்கிறது விவேகமென்ற

தாதுவை காண கிடைக்கவில்லை
சிரத்தை என்ற நாடி ஸூக்ஷ்மமாய் தோன்றுகிறது
ஆகையால் நீயுமிப்போ அறிவுகலங்க தேவையில்லை
பிராணஹானி இல்லை பரிஹரிக்க ஏதுவுண்டு

கைகண்ட ஔஷதமிருக்கிறது நம்மிடத்தில்
கொடுத்து நிறுத்துகிறோம் குணம் காணலா மிதிலே
விச்வாஸமுடன் விநயத்தோடே உண்டுவந்தால்
ஸகல வியாதிகளும் சாந்தமாய் தீர்ந்துவிடும்

பிரபலவியாதிகளும் பஞ்சுபோல் பறந்துவிடும்
பார்த்தயிடங்களிலே பழுதொன்றும் வந்ததில்லை
விரேசனத்தாலே வெளியாக வேணுமிப்போ
விரேசனம்தான் ஏதென்றால் வெளியாக சொல்லுகிறேன்

ஸ்ரீராமஸ்மரணமென்னும் குளிகையதால் அச்சுதபக்தி
என்னு மனுபானமும் சேர்த்து
கல்மஷங்கள் போககொடுத்தார் கருணையுடன்
ஆத்மஞானமாகிற ஔஷதஸஞ்சீவியும்

பிரத்தியக்ஷமாக கொடுத்தார் கருணையுடன்
ஆத்மஞானமாகிற ஔஷதம் ஜரிப்பதற்கு
சமதமங்களென்னும் திதிக்ஷை ஸமாதானம்
உபரெதியாகிர கஷாயம் கொண்டுவந்து கொடுக்க

ஔஷதமும் ஜரித்து குணத்துக்கு வந்துவிடும்
ஔஷத சித்திலை அபத்தியங்கள் வந்துவிட்டால்
பின்யாராலும் மாகாது, அபத்தியம்தான் எதுவென்றால்
அடைவாக சொல்லுகிறேன் அவித்யையுள் ஸங்கம்

துஸ் ஸங்கம் வந்துவிட்டால் ஆபாஸம்போலே ஆசையது வந்து
விடும்

ஆபாஸம்போலே ஆசையது வந்துவிட்டால் அதினாலேபட்ட
துக்கந்தன்னை யறிந்துகொண்டு தைரியம்பண்ணி
அந்தஸன்னிதானத்தில் வந்து அல்பகாலம் தன்னிலே

யடைந்துவிடுவாய் ஸுகத்தை சாஸ்திர ஸம்மதத்தால்
சற்றும் குறையாதே துர்ஜனங்கள் வார்த்தையை
செவியிலும் கேளாதே மகத்துக்கள் ஸேவையைவிட்டு வெளி
வாராதே

ஹரிநாம கீர்த்தனத்தில் அலம்புத்திவாராதே
ஸ்வரூப விசாரத்தால் சோம்பலது வாராதே
ஸமாதிதா னடைந்தால் ஸம்மதமே நமக்கு
சோம்பலது வந்தால் துக்கமது விருத்தியுண்டாம்

துக்கமடையும்போது ஸ்வரூபஸுகம் தோன்றுது
ஸந்தேகம்வந்து தடைபடும் அப்போது
ஸந்தேகம் வந்துவிட்டால் சரீரமெடுக்கவரும்
அதினாலே பட்டதுக்கம் தன்னை யறிந்துகொண்டு

ஆத்மாவிலே அனுதினமும் சிந்தைபண்ணி
ரத்னபரிக்ஷை தினம்தோரும் பண்ணிவந்தால்
ஸந்தேகங்களெல்லாம் ஸுலபமாய் தீர்ந்துவிடும்
அன்வயவியதிரேகத்தாலே ஆருய்ந்து ஸந்ததமும்

தத்வஙிந்தனை ஸதாகாலமும் பண்ணிவந்தால்
ஆத்மஸ்வரூபம் ஸுலபமாயிருக்கும்
அஞ்ஞானுவரண மத்தனையும் பஸ்மமாய்விடுமென்று
அவர் அன்புடனே சொல்லி அநுக்கிரகம் பண்ணிவந்தார்

அவர்பத்ம மலரடியைபற்றி நமஸ்கரித்து அஞ்சலிபண்ணி
அடக்கமுடன் கிட்டவந்து ஆகாமிஸஞ்சித பிருரப்தங்கள்
ஞானுக்னியால் தக்தமாய்விடுமென்று சொன்னீர்
பிருரப்தம் சேஷிக்க காரியமேது சொல்லுமையா,

ஸந்தேகத்தை தீர்த்துவிடுமென்று தாளடி பணிந்தேன்
ஸச்சிதானந்த ஸ்வரூபி சங்கையற்று தானென்றறிந்து
பிருரப்த கர்மத்தால் ஞானத்துக்கு ஹானியில்லை
ஆத்மஞானத்தினுலே பிருரப்தம் போகுமதில்லை

ஆகையினால் அன்னியோன்னிய விரோதம் சற்றுமில்லை
அருபியாகையினால் அங்கீகரித்தார் பெரியோர்கள்
சின்மயமூர்த்தி திருத்தாளிலே பணிந்து
திரும்ப ஒரு சங்கைபண்ணி கேட்டேன் தயாளுவை

ஐயா ஞானம் வந்தமாத்திரத்தில் தேகம் விழவேண்டாமோ
தேகமிருந்த உளவு சொல்லும் நீர்தேசிகரே
அம்மா ஞானம்வந்த மாத்திரத்தில் தேகம்விழுமானால்
அஞ்ஞான ஜனங்களுக்கு யாராலே விமோசனமாம்

சரீரமிருக்கிறது பலருக்கு உபகாரமன்றோ என்று
காரணமூர்த்தி யுரைத்தார் கருணையுடன்
ஐயா பிரரப்த கர்ம பலன் நசித்துபோகு மளவில் சரீர
ஜகத்வாஸனைசெய்வதும் குறையாதே பூர்வம்போல்

தோன்றுவதை போக்கும்வகை சொல்லுமையா
பிருரப்த கர்மம் நசித்துபோகு மளவில்
ஸுகதுக்கம்கூட உடந்தையாகவே யிருக்கும்
கர்மம் நசிக்கும்போது காரியமும் தானே நசிக்கும்

பரமார்த்த புத்தியினால் வாராது ஒருக்காலும்.
தக்தபடம்போல் ஜகத்தும் தேகமும்தோன்றும்
வருத்தவிரை முளைக்கமாட்டாது அதுபோலே
புனஸ்ருஷ்டி வாராது போக்குவரத்து மில்லை

விஷப்பல்லை போக்கின வேகமற்ற பாம்புபோல்
மித்யை என்று பார்த்தவனை பந்திக்கமாட்டாது
பிருரப்த கர்மம் திரிவிதமாகவே இருக்கும்
ஆரப்தபோகம் அவரவர் புசிக்கும் வேளையெல்லாம்

ஆஸக்தி சூன்யருய் அசஞ்சலராய் பார்த்திருப்பார்
திருடஞானத்துட னிருப்பார் ஜிவன் முக்தர்காண்
ஜீவன்முக்தர்க ளவஸ்தையை சிந்தித்து சொல்லவென்றால்
அளவிடக்கூடாது அதிரகஸ்ய மத்தனையும்

அல்லல் பிறப்பற்று பரமானந்தத்திலேயே அமர்ந்து
ஜகத்தை விளக்கியே வைத்து ஜீவன்முக்தாள் ஸஞ்சரிப்பார்
ஜீவன்முக்தாள் தன்னவஸ்தையை சீக்கிரமா யப்பியஸித்து

அனேக சரீரத்தை பார்த்து சிரித்து முருவலிட்டு
தாமரை நாயகரை ஸந்தமும் பூஜைபண்ணி

த்வைதவிருத்தி தோணுதே ஸ்வரூபமாய் தோன்றி
பத்துஸ்தலத்தும் பரம்ஜோதியான வஸ்துசுத்தவெளியாய்
ஸ்வயம் ஜோதி ஸ்வஸ்வரூபம் தன்னில்ஆய்விடுவாய்
இன்னும் அவர்களுடைய கீர்த்தி எடுத்துரைக்க கேளாய்

காமக்ரோதங்களென்னும் கள்ளர்களையும் தான்துரத்தி
ஆசைகளற்று அழுக்குகளேராதே ஆத்மநதியில் அனுதினமும்
[ஸ்நானம் பண்ணி

நிராசை என்னும் வஸ்திரத்தை நிர்மலமாகவே தரித்து
சதாசிரவண மென்னும் கனககுண்டலமும் தான்தரித்து

அச்சுதர்பக்தி என்னும் அடைக்காயும் தானடக்கி
ஜெகத்தை விளக்கிவைப்பார் ஜீவன்முக்தர்கள்காண்
அவர்கள் அன்புடனே தந்த ஔஷதம் ஜரித்தபின்பு
அனுதியாகவே துடர்ந்திருக்கும் அஞ்ஞானநோய்விட்டு

ஆனந்தரஸ மென்னுமிந்த அன்னத்தி லபேக்ஷையுண்டாகும்
நித்தியஸுகமென்னும் நித்திரையுமுண்டாச்சு
ஜன்மவியாதி எல்லாம் சிகித்ஸைபண்ணி போக்கிவைத்தவர்க்கு
என்ன கொடுப்போ மென்றெண்ணி மனஸிலுள்ளே

வையகத்தி லுண்டான வஸ்துவெல்லாம் கொண்டுவந்து
கூட்டிக்குமித்து கொடுத்தாலு மீடாகாது
கோடிதிரவியத்தை கொடுக்கிறோ மென்றாலும் அவர்
பண்ணும் கிருபைக்கு பிரதியாகமாட்டாது

பிரதக்ஷிணமாக வந்து பாதத்தின் கீழே பணிந்து அனேக
நெடுநாளாய் அகழில் கிடந்த என்னை விடுவித்து விடுதலை
கண்டாப்போல்

தீப்பட்டமாளிகையில் அகப்பட்ட பேர்களை கையைபிடித்து
வெளியேற்றி விட்டாப்போல்

ஆற்றிலே பெருகிவரும் ஜலத்தில் அமிழ்ந்துவரும் பேர்களை
கையை பிடித்து கரையேற்றி விட்டாப்போல்
சோகமென்னு மிந்தவடவாமுகாக்கினியில் பற்றிதீப்படுகிற
வேளையிலே

கிருபையினாலே உத்தாரணம் பண்ணிவைத்தீர்கள் ஈதொன்றோ
போராதோ

பிரத்தியக்ஷமாகவந்து பாதத்தின் கீழ்பணிந்து
செந்தா மலரடிக்கே தெண்டனிட்டு பணிந்து

ஜன்மவியாதி எல்லாம் தீர்ந்ததென்று கொண்டாடி
தங்கள் தாளடிக்கே சிரத்தை யதிகமுண்டாய்

பவபயங்கள் போக்கி வைத்த பண்டிதனுர் கவி தன்னை
படித்தவர்கள் ஆனந்த ஸாகரத்தில் அமிழ்ந்து லயமாய் விடுவார்

---

(ராகம்-தோடி)

பல்லவி

ஆத்ம ஞானவலைக்குள்ளே நான் அகப்பட்டுகொண்டேனே
விதியே

அனுபல்லவி

பத்மலோசனர் முகத்தில் விழித்தபலனோ-யிதுநானறியேன் (ஆ)

சரணம்

தத்வமஸி என்னும் மருந்தைகூட்டி தாம்பூலசர்வணத்தா
லூட்டியே யுக்திஸாரம் மிஞ்சியே
ஸம்யோகத்தில் என்னுடன் கெஞ்சியே
நித்தியானந்த நிலையை நிருத்தியே, உருவேத்தியே
வைத்து கொடுத்தார் என்னமோ
அதில் மயங்கினேன், அத்தை தயங்கினேன் சற்றே (ஆ) 1

அகத்திலென்றும் புறத்திலென்றும், அடுத்துகொண்டவர்க்
காகியே, ஸுகத்தை உள்ளுக்குள்ளூட்டியே
ஸொந்தமாய் என்னை பாராட்டியே, இகத்தாரென்னை ஏசவே
இதத்திலே அவர் மதத்திலே, ஜகத்தில் ஒன்றுமில்லாம
லாக்கியே, செய்தவரிவர் செய்தவரிவரென்னும் (ஆ) 2

தத்பத சுருதிவிபத்துத்தானோ
தலையிலே பிரம்மன் எழுத்துத்தானோ
இப்படி என்றும் நானறியேன், இந்த சித்பரமே அப்பிரமேய
தத்பதசுருதி தெரியுமோ, தர்மிகளல்லோ நான்கர்மிகளல்லோ
அப்ரமேய சிதாத்மரூப, அசலமாம் வெங்கடேசுவர மாமவ. (ஆ) 3

## கண்ணிகள்

ஸ்ரீசீர்பெருகும் ஸச்சிதானந்தமாகிய தேசிகனே-குருநாதா
பார்முழுதும் பரமாகி நிரைந்திட்ட பாக்கியமே-குருநாதா 1

பேரறிவாகிய பிரம்ம நிலைகடல் பேச்சறியேன்-குருநாதா
ஆர்தருவார் எனக்கருளின அனுபவம் ஆண்டவனே-குருநாதா 2

மரமேறி கைவிட்ட மானிடன்போலவே மாண்டுபிறவாமல்-குரு
நாதா
ஸந்தத மனுபவமாகவே வேதாந்தத்தை சாத்திவைத்தீர்-குரு
நாதா 3

பந்தமோக்ஷ மென்னும் பேரறிவாகிய பேதையானேன்-குருநாதா
சிந்தை மகிழ்ந்து என்னை சிவபதம் சேர்த்துவைத்த தேசிகனே-
குருநாதா 4

ஸரஸ பேச்சில் ஸச்சிதானந்த நிலைதந்த ஸ்வாமி நீயல்லவோ-குரு
நாதா
நித்திய நிரஞ்சன நிர்குணமாகிய நிர்மலனே-குருநாதா 5

திருடமெனக் கிந்ததும் தேவரீர் நீரல்லவோ தேசிகனே-குருநாதா
பரம ரகஸ்யம் பரமெனக் கருள் செய்த பாக்கியமே-குருநாதா 6

புத்திக்கும் ஸாக்ஷியாய் போதமதாகிய பூரணனே-குருநாதா
ஸத்திய ஞானானந்தமாகிய சாசுவதனே-குருநாதா 7

அந்தரங்க மறியாதிருந்து நான் அலைந்து திரிந்தேன்-குருநாதா
ஸந்ததம் குருபாத பக்தி யனுபவம் ஸத்குருவே செய்யும்-குரு
நாதா 8

அந்தகன் போலவே அலைந்து திரிந்தஎன்னை ஆண்டவனே-குரு
நாதா
சிந்தை மகிழ்ந்து சிவபதம் அருள்செய்த தேசிகனே-குருநாதா 9

பக்தி வைராக்கிய பழமறை நூல்களால் பரம்பொருளே-குரு
நாதா
சுக்தியில் ரசதம்போல் பிரபஞ்ச மெல்லாம் சொன்னீரையா-குரு
நாதா 10

முக்தி பரம ஸுகம் தனக்குள் தானே என்றும் முன்னமே
யிருந்தாலும்-குருநாதா
சுருதி யுக்தி அனுபவம் சொல்லி உலகப் பேயை ஒழித்தீரையா-
குருநாதா 11
அஸ்திக்கும் ஸாக்ஷியாய் அறிகிர அனுபவம் ஆர் தருவார்-குரு
நாதா
ஸர்வமும் தானாக ஸமரஸபதம் தந்த ஸ்வாமிநீயல்லவோ-குரு
நாதா 12
பர்வதமாம் பிரதிபந்தமறுத்து வைத்த துன்பாதமல்லவோ-குரு
நாதா
நிரதிசயானந்தம் நீ எனக் கீந்ததும் நிர்மலனே-குருநாதா 13
துர்விஷயங்களை துரத்தி தூளாக்கிய என்துரைநீயல்லவோ-குரு
நாதா
காஷர்ம் படர்ந்த கண்ணில் கடுவெளி காட்டிவைத்த
காரணனே-குருநாதா 14
நாசப்பிறவி நீக்கி நாடெனக் கீந்ததும் நாயகனே-குருநாதா
பாசமகற்றி பதிதன்னில் சேர்த்துவைத்த பண்டிதனே-குருநாதா
தேசமெங்கும் புகழ் ஸ்ரீவெங்கடேசுவர தேசிகரே-குருநாதா. 15

---

(ராகம்—ஆரபி)

பல்லவி

பிரணவம் பிரணவம் என்று வீண்புலப்பம் கொள்ளாதேடா
பிரணவ நிலையறிந்து பாரடா

அனுபல்லவி

பிரணவ நிலையின்னதென்று அறிந்த பெரியோர் பாதம் (பி)
கண்டு பணிந்து பிராணாயாமம் செய்யடா ஜீவா

சரணம்

பிரணவ நிலையறிந்து பிராணாயாமம் செய்வாயானால் பிறக்கவும்
இறக்கவும் வேண்டிவருமோடா
பிரம்ம தியான ஸமாதியில் பிரணவம் வேண்டுமானால்
பிரணவநிலை யின்னதென்று பார்த்து படியடா ஜீவா (பி) 1

மந்திர யோகமான பிரணவம் தந்திரமாய் செய்யாதேடா
மனஸுகொண்டு பாராத மந்திரம் உனக்கேதுக்கடா
மனதை பரக்கவிட்டு நீ மூக்கை பிடித்தாயானல் மந்திரசித்தி
யாகுமோடா - மகத்தென்றும் சொல்வாரோடா ஜீவா (பி) 2

அகங்காரமிருக்கையில் ஓங்காரம் அண்டுமோடா
அகங்காரத்தைவிட்டு பிரணவ ஓங்காரத்தை கொள்ளடா
அனுகதத்தில் மனதை யணுகாமல் நிருத்தினல்
பிரணவ ஓங்காரத்வனி ஓசையறியலாமேடா (பி) 3

மனதைஜயிக்க ஜீவா உன்னலே யாகுமோடா
வாசிவசத்தாலே மனதை வசமாக்கடா
மனதை பிரணவம் கொண்டு நீ பார்த்து பிடித்தாயானல்
பிரணவ முழக்கம் பிரத்தியேகமாய் தெரியுமேடா (பி) 4

பூரகம் முப்பத்திரெண்டு கும்பக மிரட்டியாக கொண்டு
ஈரண்டு ரேசகத்தை விட்டு நீ பாரடா - ஏ ழெட்டு
நாளைக்கெல்லாம் இவ்விதம் செய்வாயானல்
வாசிவசமாகும் நீ யோசனை செய்யாதேடா (பி) 5

வாசி யிருபத்தோராயிரத்தி அறுநூரையும் வீணுக
போக்கிவைத்து வியஸனம் கொள்ளதேடா
வீணன காயமிது விழுமிடம் தெரியாதேடா
வாசியை வசமாக்கி ஸதாசிவத்தை பாரடா ஜீவா (பி) 6

தூக்கம் தூக்கமென்று ஆயுளை தொலையாதேடா
தூங்காமல் தூங்குவதும் ஸுகமல்லவோடா மூடா
தூலம் துடிக்கும் முன்னே சூக்ஷ்மத்தை கண்டுக்கோடா
தாரகமான பிரணவ நிலையை நீ பாரடாஜீவா. (பி) 7

---

# தொட்டில் பாட்டு

போனேன் அங்கட ரஸஸாகரத்திலென்னாளும்
தானே அமர்ந்ததிலே தரித்துடனே ஜகத்தைகாணேன்

ஸர்வபூதங்களிலும் தாமிருப்போமென்று தன்னிடத்திலே
ஸகலமும் தரித்திருக்கிறதென்றும்
அகம் மதி மமதையினால் அறிவழிந்து போனால்
அகிலகர்மம் செய்தாலும் புருஷார்த்த பலத்தைகாணேன்

வெடிந்தஉடனே நதியில்வந்து விழுந்துகுளித்தாலும்
வெளுத்தவஸ்திரம் தரித்து குழச்சிட்டு போட்டாலும்
சொடிந்த நிலம் தேய சிவபூஜை பண்ணினாலும்
மணிஅக்ஷமாலைகளை அணிந்தாலும் பலத்தைகாணேன்

தொண்டையெல்லாம் வறண்டுகட்டி மண்டை இடிஇடிக்க
இரண்டுதடும் உலர்ந்து இருதாளும் வலியெடுக்க
கண்டதெல்லாம் ஸர்வகாலம் கத்தி நறம்பு யிசிக்க
உண்டோயிதினாலே உபரெதி பிருப்திகாணேன்

ஆகமபுராணங்களை யரைத்துக்குடித்தாலும்
உலகமெல்லாம் ஸஞ்சரிக்க யோகமிருந்தாலும்
ஏகமான அகண்ட வெளிஞான மற்றுப்போனால்
ஏழுகோடி மந்திரத்தை ஜபித்தாலும் பலம்காணேன்

சாடி விழுந்தோடுகிற மனதை வசமாக்கி
நாடி யிந்த வஸ்துவிலே நாமரூ !ரூபங்கள் நீக்கி
மேடு பள்ளமில்லாத வெளியது கண்டபின்பு
வீட்டிலுள்ள ஸம்ஸாரம் தன்னைவிடவேறு காணேன்

காமக்ரோத லோபமோகமென்னும் ஸர்ப்பஸமூகங்கள்
கார்த்து மந்த ஸம்ஸார பித்தை வெகுநாளாய்
ஸ்ரீமத்குரு கிருபை லபித்து சின்மயமான வுடன்
சீக்கிரமாய் பித்தெல்லாம் கரைந்துபோச்சு சிவோஹம்

ஸ்தலரஹிதமானவற்கு ஸஞ்சாரமேது
ஸச்சிதானந்தருக்கு துக்காதி ஏது
மலரெஹிதமானவர்க்கு ஸ்நானாதி ஏது
வாக்குமனஸற்றவர்க்கு வசனாதி ஏது - சிவோஹம்

புத்தியில்லை மனமுமில்லை அத்வைதம் தானே
முக்தியில்லை பந்தமில்லை என்றெனக்குச்சொல்லி
யுக்திசொன்ன குருவெங்கடேசுவரனார் கிருபையால்
பக்தியுடனே பணிந்து அகண்டமானேன் - சிவோஹம்

---

(ராகம்-பைரவி)

பல்லவி

உமக்கென்ன உபகாரம் பாரும்
உலகத்தில் கண்டுதேரும் (உ

அனுபல்லவி

காமமோஹம் பேச காரியமென்ன
காரணகுரு வெங்கடேசுவரரே (உ

சரணம்

ஆயிரந்தரம் அருள்செய்திருக்கிலும் பதினாயிரந்தரம்அருள்
செய்திருக்கிலும்
எல்லோருக்குமது ஏருமோ பெய்யும்மழை சிப்பிகளிளாகிலும்
முத்ததுண்டாமோ கூறும்
தாயும்தமரும் தன்னுடலாசையும் தவிர்த்திருக்குமோ யார்க்கும்
வாயும்வலுவும் ஞானவழியும் துறவும் வார்த்தைசொல்வார்களே
போரும் (உ)

என்னசொன்னாரிவர் எழுந்திருக்காமலே இரவுபகலும்பார்த்து
இன்னபடியாகும் அவர்சொன்னது உண்மையென்றெண்ணி
மனஸிலேற்றி அவர்
சொன்ன வழியே நடந்து ஆத்மஙிலை கடல் சோதித்து
உணர்ந்து பார்த்து
ஸன்னபின்ன ஜட சைதன்ய ஸம்புந்தத்தையெல்லாம்தீர்த்து
(உ)

ஆவரணாதிகளழிந்து அகண்டநிலை அனுபவமாய் வல்லையா
தீவிரமாம்திவ்ய போதானந்தாமிருதம் தேன்பால் ருசி தல்லையா
ஸ்தாவராதிகளை தன்மயமாய்சொல்ல தரணியில்வெகு
தொல்லையா
தீவிரஞானத்தால் தேசம் பிரஸித்தியுள்ளார் தினமும்
அனுபவிக்கவில்லையா (உ)

(ராகம்-சுருட்டி)

## பல்லவி

சந்திரோதயமாச்சே, போதசந்திரோதயமாச்சே (ச)
பிரபோத சந்திரோதயமாச்சே

## அனுபல்லவி

இந்திராதி முனீசுவருளுக்கும்கூட (ச)
எட்டாத வெங்கடேசுவரரால்

## சரணம்

அறிவுஅம்புதி விருத்தியாச்சே
மனதிளுலாம்பல் மலர்ந்ததாச்சே
பெருகிற ஆனந்தம் கேணியதாச்சே (ச) 1
சொல்லமுடியில்லாத ஸுகமதாச்சே

காயமும் வேருச்சே
காமாதி கள்ளர்பயமும்போச்சே
ஸ்வயமென்னும் பதம்பொய்யாச்சே (ச) 2
ஹம்ஸோகம் பாவனை மெய்யாச்சே

காமகுரோதமும் போச்சே
மோகயிருளும் போச்சே
ஸ்வபாவமுக்தி ஸபலமாச்சே (ச) 3
ஏகாந்த நிர்மலவெளியாச்சே

கண்டதிருசயம் போச்சே
தோன்றினகானல் ஜலமும்போச்சே
அண்டமுனிவருக்கு மரிதாச்சே (ச) 4
அபரிமிதானந்த ஸுகமாச்சே

ஜாதிவர்ணுசிரமம் போச்சே
வேதசாஸ்திரம் வெரும்பேச்சே
ஆதியந்தமில்லாத அறிவாச்சே (ச) 5
யாருக்கும் கிடையாத அனுபவமாச்சே

---

(ராகம்--காம்போதி)

பல்லவி

ஸச்சிதானந்தமாய் தாமிருந்தும் மறந்தவர்போல்
அதெப்படி முன்னிருந்தார் அன்னமே (ஸ)

அனுபல்லவி

உசிதமே உசிதமே உசிதமே உன்னிடத்தி
அச்சம்வர யிடமில்லையே (ஸ)

சரணம்

மனதுண்டோ மறந்தரிய வபுஸண்டோ பிறந்திறக்க
மலமுண்டோ நிர்மலத்தில் சரிபெரிது சிறிதுண்டோ
ஜாதிவர்ணமதிலுண்டோ ஸாக்ஷியென்ன ஸாக்ஷியுமுண்டோ
நிறைந்த ஸுகஸாகரத்தில் நிஷ்கள ஸகளமென்ன
அதிசய மதிசய மதிசய மிதுவே (ஸ) 1

வாய்திறக்க யிடமில்லை மௌனஸங்கல்பமில்லை வந்தது
போனதுமில்லை
ஆதியந்தம் நடுவுமில்லை அவித்யை உபாதியுமில்லை
முக்தனை என்னிடத்தில்
பாதிஎன்றும் நேதிஎன்றும் பாதிவந்த ஸ்வப்னமென்றும்
ஸ்வப்னபுதுமையிதுவே (ஸ) 2

அஸங்க உதாஸீனருய் அபரிச்சின்ன பூரணராய்
அழிவற்ற ஸ்வரூபராய்
நிரந்தரராய்-ரஸகனராய் பரிபூர்ண காமராய்
நித்தியராய் பரிசுத்தராய் தாமிருந்தும்
மலடிமைந்தன் வர்க்கமகிமையிதுவே அற்புதம் (ஸ) 3

## கண்ணிகள்

ஆரோபித்த ஜகத்தெல்லா மாத்மஸ்வரூபம் 1
அதற்கு பிரமாணம் சொல்வேனயமாத்மா பிரம்மம்

எல்லாமாத்மாகாரமானா லெதிர்தோற்றுவாரனன் 2
பொல்லாத ஸம்சயம்போக்கி பரிபூரணமாக்கையா

தோற்றுகிறது நீயோ நாமரூபமோ பாராய் 3
நேதியான நாமரூபம் நீயாவாயோ போடா

நாமரூபமாமேயனோல் நம்புமோ வேதம் 4
ஆமோ நாமரூபம் பிரம்மம் ஐயா நீர்சொல்லும் ஐயா நீர்கேளும்

அம்மாநீகேளாய் ஆத்மா நாமரூபமாகும் 5
தப்பாமலே ஆத்மா நாமரூபமாகும்

ஐயாயிது ஆச்சரியம் யாரறிவார்கள் மெய்யென்றெண்ண 6
யுக்திசொல்லும் வேதாந்தகுருவே வேதாந்தகுருவே

யுக்திசொல்லுகிறேன் பக்தியுடன் கேட்பாயானால் 7
முக்தியடைவாய் அதற்குமேலே முக்தன்நானென்பாய்

அலையிலிரங்கி ஸ்நானம் செய்தேனென்பாரே ஜனங்கள் 8
அலைஜலம்தான் ஜலம் அலைதானாதே யுக்தி

நாமரூபமாகுமேயானால் நால்வேதமேது 9
காமமறகேட்டு கற்றால்கர்மம் தானேது

சுருதியுக்தி அனுபவத்தால் வேறில்லைகண்டாய் 10
போதிப்பித்த வெங்கிடேசுவரர் கிருபையினாலே

---

(ராகம்-முகாரி)

## பல்லவி

எங்குமாக எனலேகிருய் மனமே
எண்ணமற்றயிடத்திலே நீ நிலேத்திராய் (எ)

## அனுபல்லவி

சாடியோடியே வருவாய் காடுமேயாதே மனமே
தேடிபாராய் ஸத்குருவை மோடியாகவே தினமே (எ)

## சரணம்

கற்பகாலம் ஞானமில்லாமல் கர்மம்செய்தால்
துக்கஹேது ஜன்மம்போகாது
அல்பகாலம் பிரம்மமகமென்றேயிருந்து பார்த்தால்
அப்புரம் ஜன்மம்வாராது
கெர்ப யாதனே துவக்கி கிழமாய் விழும் தன்னிலும்
ஸ்வல்பமானுலுமதில் ஸுகமுண்டோ ஆகையாலே (எ) 1

பஞ்சபூதத்தால் முடைந்த பாண்டத்தை பார்த்தால்
நெஞ்சும் மனமும் குமட்டிவரும்
ரஞ்சிதமென்றெண்ணுதே அதைதோலாலே போர்த்தி
வஞ்சனையாய் மூடியிருக்கும் அஞ்சுகோசத்தை பிரித்து
பஞ்சுபோலே பறக்கடித்து கோசபாவனையைவிட்டு
மிஞ்சினதாய் நீயிருடா (எ) 2

லிங்கதேகம் வஸம்பண்ணியே நிர்மலமாக "அஹம்பிரம்மாஸ்மி"
என்று நீ இராய்
கங்குகறையற்ற ஆனந்தகடல் தன்னில் மூங்கியனுபவித்தே
யிராய்
வெட்கமில்லேயோ உனக்கு வம்புவிணளப்பதற்கு
அங்கமற்ற ஆத்ம ஸுகம் நிரம்பவே யிங்கிருக்க (எ) 3

காடாந்தகாரமற்று நீயிராய் சுகாஸனத்தில் ஏகாந்தஸ்தலதில்
நீயிராய்
வெளியில் வாக்கியார்த்ததிருஷ்டி அதனுல் வஸ்துவிடத்தில்
நிலைத்தேயிராய்
ஜோதிர்மயமானவரை சுத்தபரிபூரணரை (எ) 4
ஸ்ரீமத்வெங்கடேசுவரரை சிந்தையில் தியானம்செய்வாய்

---

(ராகம்–ஆனந்தபைரவி)

பல்லவி

உபகாரத்திற்கு பதிலுபகாரம் செய்ய வேறே (உ)
உலகத்திலொன்றும் காணேனையா

அனுபல்லவி

அபருதியாவேனே அடியேனிந்த (உ)
அகிலமுழுது மறிவுமயமாய் தோன்றுதையா

சரணம்

உடல்பொருளாவி யிவ்வுலகுமக்கீந்தாலும்
ஒருமொழிக்கு விலை பெறாதையா
உடலாதிபிரபஞ்சத்தி லொன்றுமுமக்கில்லை யுதில் (உ) 1
உம்மைத்தவிர வேருண்டோ ஐயா

ரணபாதகனென்று நீதியுரைத்தாலிந்த
ரணம்தீர்க்க மாட்டேனையா
குணரஹிதரென்று கொண்டாடுவேனல்லாமல் (உ) 2
குவலயத்தில் என்செய்வேனையா

கூட்டுக்குள் அடைபட்ட புழுவுக்குபதேசத்தால்
குளவிக்கு உதவியுண்டோ ஐயா (உ) 3
நாட்டுக்குள் வெங்கடேசுவரரே
அவ்வாறுபோலே நானென்ன சொல்வேன் ஐயா

---

(ராகம்-ஸௌராஷ்ட்ரம்)

பல்லவி

அறிவு தானென்று அறிந்தவர்க்கு
அன்னியமுண்டோ அதை நீ பாராய் (அ)

அனுபல்லவி

குருவுண்டாகி குறிகுணம் வந்து
மருவும் ஆனந்தகோச மைந்தும் (அ)

சரணம்

பஞ்சபூதபிரபஞ்ச விகாரம் அஞ்சு தன்மாத்திரை
அறிந்த பிரகாரம்
கோசவிஷயம் குறிக்கும் அன்னேரம்
மிஞ்சினதே யதுவேதாந்தஸாரம் (அ) 1

கற்பித பிரபஞ்சமிதென்றும்
கானல் ஜலம்போலேகண்டும்
ஸ்வப்பனத்தில் கண்டஸுகமிது
அற்பமாமிது ஆகாதென்றும் (அ) 2

பெண்டுபிள்ளைகள் பொருளென்றும்
அன்றுமாதவர் சொன்னதையறிந்தும்
கண்டுகண்டு கருத்தில் கலந்து
நின்றதுதானே நினைவாய் நினைந்து (அ) 3

மட்டில்லா வேதசாஸ்திரம் கொண்டு
அதைசட்டி சட்டுவம்போலே கண்டு
குட்டு மார்க்கத்தை அறிந்துகொண்டு
வெட்டவெளியாகவே நின்று (அ) 4

பருவம்கண்டு பாக்கியங்கள் வந்து
தரவும் எங்கள் வெங்கடேசுவரர்
குருவின்ஸன்னதி கண்ட ஜன்மங்கள்
ஸர்வகாரணமாமவர் தங்கள் (அ) 5

---

(ராகம்-கல்யாணி)

### பல்லவி

வாராரோ என்னைப்பாராரோ முக்தி
தாராரோ என்ஸ்வாமி (வா)

### அனுபல்லவி

ஆருருள்ளம் தன்னில் சேருர் உலகெங்கும்
கூருகியே நின்ற னூருயிரம் கணங்கள் (வா)

### சரணம்

சண்டமாருதம்போலே அண்டம்பொடி தூளாக்கி
வண்டமாயையை அவர் விண்டவிமலபோதர்
தொண்டர் மனதில்நின்று கண்டபவ மறுத்து
அகண்டானுபவத்தை விண்டே வாக்குகள் கொண்டு (வா) 1

ஸத்து சித்தானந்த அத்துவைதியே இவர்
ஒருத்தரெதிரில்லாத வஸ்து இவரென்று
பக்திசெய்தவர் ஜீவன்முக்தியடைய நல்ல
ஸத்தியமாயிவர் முக்திஸாதனம் கொண்டு (வா) 2

ஸத்துசித்தானந்தர் அபரிச்சின்னர் அருளினலே
ஈசரே இவர்க்கொரு நாசப்பிறவியில்லை
ஈசர் அவர் ஸ்வபிரகாசர் என்குரு
பிரம்ம வெங்கடேசுவரர் இங்கே (வா) 3

---

(ராகம்-ஸௌராஷ்டரம்)

### பல்லவி

சிதஹம் பரிபூர்ணம் தேஹம் நாஹம்
பூர்ணம் பிரம்மைவாஹம் (சி)

### அனுபல்லவி

சிதேகமே நானென்று தைலதாரைபோல்
சிந்திக்கபிற்பாடு தேஹ ஜகத்துண்டோ (சி)

சரணம்

அறியேன் நானென்று சொன்னால்
எங்கம்மா மலடி என்றால் ஒக்குமோ
எனக்கு நாக்கில்லை என்று எப்படி சொல்லுவாய்
எங்கும் பரபிரம்மம் எல்லாம் நீ தானடா (சி) 1

அறிந்தபின் விவகாரங்கள் மனஸே ஆமோவென்று
சங்கித்தாக்கால் தூங்கி முழித்தவன்
ஸ்வப்பனம் சொன்னாப்போல்
ஸ்வஸ்வரூபம் தன்னை சொல்லி மகிழ்ந்தாப்போல் (சி) 2

அஞ்ஞானி போல ஞானி ஸமனன்றோ
ஆகாரவிவகாரத்தில் ஏது அடையாளம்
என்று நீ கேட்டாக்கால்
கர்த்தா அஞ்ஞானி அகர்த்தா பிரம்ம நிஷ்டன் (சி) 3

ஊன்றிய பாறையின்மேல் பிரவாகங்கள்
ஓடியும் அசையாதுபோல்
ஒன்றின்மேல் ஒன்றாக விருத்தியடைந்தாக்கால்
கல்லுபோல் அந்தக்கரணம் அசையாது (சி) 4

ஆடியே கூத்தாடியும்தான்
அவன் தானே பாடிகைகொண்டு நாடியே
கும்பத்தில் அணிகண்டாப்போல்
ஊன்றியே சித்தத்தில் ஒன்றே அஹம் என்று (சி) 5

விபசாரி காரியம்போல் விவகாரம்
மேலாகச் செய்துவந்தாலும் சோரபர்த்தாவின்மேல்
சித்தம் லயித்தாப் போல்
ஸ்வஸ்வரூபம் தன்னிலே சித்தம் ததாகாரம் (சி) 6

ஞானிக்கு விவஹாரங்கள் உண்டேயானால்
கல்மஷம் அற்றிருப்பார்
நிக்ஷேபம் கண்டவர்போல்
நிரதிசயானந்தத்திலிருப்பார் (சி) 7

உன்மத்தன் பாலனைப்போல் ஸஞ்சரிப்பார்
ஊமையைப்போல் வாயை மூடிக்கொண்டிருப்பார்
பஞ்சேந்திரியங்களிலே யிருந்தாலும்
பார்த்துக்கொண்டே யிருப்பார் (சி) 8

பாணிபாதங்களினால் ஸஞ்சரிப்பார்
ஸ்தூலத்தில் ஸ்தூலமாயிருப்பார்
ஸூக்ஷ்மத்தில் ஸூக்ஷ்மமாயிருப்பார்
ஜோதி வெங்கடேசுவரர் பாதம்மனமே (சி) 9

## (ராகம்—மத்தியமாவதி)

### பல்லவி

ஸாக்ஷி சைதன்னியம் ஆனேன் என்றும் (ஸா)
ஸத்குரு கிருபையினாலே

### அனுபல்லவி

காக்ஷிகண்டத்தில் நின்று ஸாக்ஷித்திருந்துறைந்து
ஈக்ஷித்ததினால் வந்ததை யுபேக்ஷித் தொருவிதமாய்
தீக்ஷணை செய்து விகாரமிழந்து அபேக்ஷியில்லாமலே தத்பதமாகியே
தீக்ஷித்தவனை தியாகம்செய்ய அதிதீக்ஷிண்ய திவாகரன்போலவே (ஸா)

### சரணம்

மாயாஉடல் கருவி என்றும் மற்றொருவருக்கும்
வாயாலுரைசெய்யாது கண்டும்
வானுக்குள் நின்றும் ஹ்ருதயானந்த நிலைகண்டும்
ஒருவருக்கும் பிரசியாது அனுபவம் என்றும்
யேகாந்த நிர்மலத்தில் யோகசயனம்கண்டு
போகாந்தரங்களுக்குள்ளும் தாகம் தணிந்துகொள்வாய்
பாகாயுறைந்து பராபரவெளியிலே தேகம்
மறைந்தது தேஜோவானாகியே யோகநிலை (ஸா) 1
அதீதநிலையிலே சோகம் மறந்து ஸ்வபாவமதாகியே

தேகாதி பிரபஞ்சம் வேறாகி தேஹாதிகளுக்குள்ளும்
மோகபாசம் அறுத்து நீக்கி முக்காலத்திலும்
சாகாக்கால் என்றும் நோக்கி விதிவிதமாகி
வேகாததலையாகி காயாபுரியிலிலே
மனம் நாயாய் திரிந்து உலகில்
பேயாடுவார்கள் ஸம்பிரதாயமறிந்துகொள்வாய்
ஞாலமடங்கியே நானறிவாகியே மாயை துலங்கியே
மறையோர் கர்மங்கள் செய்ய நடுங்கியே
சின்மயமாய் தானாய் சாயை ஒழிங்கியே ஸமரஸம்தானாய் (ஸா) 2

சிரவணாதி ஸாதனத்தினாலும்
ஜன்மங்கள், கோடி தபமீச்வரார்ப்பணத்தினாலும்
தரணிபுகழும் ஸ்ரீகுரு வெங்கடேசுவரரை
சிந்தித்தாலும் புத்திவிவேகத்தாலும்
தாமாய் உலகுக்கெல்லாம் சிவமாய் நிறைந்த
ஞானும் பர்வதோஷாதிகளுக்குள்ளும்
அவரனுக்கிரஹத்தினாலே (ஸா) 3
சிவமொரு சிந்தனை சேதனமாய்
அவனிவனென்னும் அனுபமதானால்

(ராகம்-ஸாவேரி)

## பல்லவி

யாரடா உன்னை யறிந்துபாரடா பரமாத்மா என்று
தேரடா தேர்ந்தால் உனக்கெதிர் யாரடா (ஆ)

## அனுபல்லவி

ஸ்தூலஸூக்ஷ்ம காரணனுடா நீ
துரியமான பொருள் தானேடா
ஆறுவிகாரங்கள் தானேடா நீ
அருமையாகின்ற அறிவுதானேடா (ஆ)

## சரணம்

போக்கு வரத்துடல் தானேடா நீ
பூரணமாகி நின்ற பொருள் தானேடா
சேர்க்கும் நாமரூபம் தானேடா
சேதனமாய் நின்ற சிவன் தானேடா (ஆ) 1

தோன்று மவஸ்தைகள் தானேடா நீ
தொடர்ந்து வந்த ஞான துறையோடா
மூன்று விருத்திகள் தானேடா நீ
ஸூஷூம்னை சக்திதானேடா (ஆ) 2

கருவிகரணங்கள் தானேடா நீ
அத்தைக் கண்டறிந்த ஞானக்கண்ணேடா
காலம்மூன்றும் கழிந்தவனேடா நீ
காரணமாய்நின்ற கருத்து தானேடா (ஆ) 3

மாறிவரும் உடல் தானேடா நீ
மாசில்லாத வான்மதியோடா
குறியும் குணமும் தானேடா நீ
குரு வெங்கடேசுவரர் தானேடா நீ (ஆ) 4

---

(ராகம்-மத்தியமாவதி)

பல்லவி

இந்தவேளை யறியாமலுன்னை எந்தவேளை யறிவாய் (இ)

அனுபல்லவி

அந்தமாகிய மனுஷ்ய ஜன்ம மறிதல்லவோ (இ)
கிடைப்பது ஐயையோ

சரணம்

சாஸ்திரம் பலகோடியிருக்கிறது
ஸாதனம் நன்ருய் நாலிருக்கிறது
ஸோத்திராதி கரண மூண்டடா (இ) 1
வெகுநேர்த்தியான விவேகமூண்டடா

பாத்திரம் தீபரூபமடா
பாருக்குள் பெரியோருண்டடா
ஸூத்திரதாரிபோலிருக்குதே யுந்தன் (இ) 2
ஸ்வரூபமாம் பிரதிமறைக்குதே

காரணகாரியங்கள் தோன்றுதே
காயமும் வேருககாணுதே
ஆரணம் பொய்சொல்லாதடா (இ) 3
ஆத்மா நீதானுமடா

பூரணமாய் பொங்குதே
பொல்லாத ஜன்மம் நீங்குதே
தரணி எல்லாம் தயங்குதே (இ) 4
தன்னையறியாதே மயங்குதே

ஓடமிருக்கிறபோது வேணும்
உடலுக்கு காலன்வாதுதான்
பாடாமல்பாடுதடா நூல் (இ) 5
பாரடா முக்திகூடுதடா

மூடபுத்தியை துரத்தடா
ஜீவன்முக்தி வழிமனம் நிறுத்தடா
கூடஸ்தராம் ஈசன் சிரிக்கிருர் (இ) 6
எங்கள் குருவெங்கடேசுவரர் இருக்கிருர்

(ராகம்-தோடி)

பல்லவி

ஜீவா சிவன் நீயடா சிந்தையை விட்டால்
சின்மயம் நீதானடா (ஜீ)

அனுபல்லவி

அகம்தேகமில்லாமல் ஸோகம் பாவனை பண்ண (ஜீ)

சரணம்

மிருத்திகையில்லாமல் பாண்டம் யுக்தியினாலுண்டாமோ
விறையில்லாமல் முளைமுளைத்து விருக்ஷம் காச்சு பழமாமோ
அப்புவன்னியி லலை நுறையுடன் அம்புதிவிளங்குமோ
அறிவன்னியில் தோன்றுமோ தன்னைவிட (ஜீ) 1

அக்கினியில்லாமல் தூமமாவர்த்தித்து மூளுமோ
ஆவன்னியில் பயஸுடன் கிருதமுண்டாய் ஆகுதிபண்ண கூடுமோ
ரஜ்ஜுவிலே தோன்றும் ஸர்ப்பம் யூகத்தால் பழுதையன்னியி
[லாகுமோ
பிரஞ்ஞை யன்னியில் கட சருவாதிகளது ஏர்க்குமோ புஜிக்
[குமோ (ஜீ) 2

பருத்தியன்னியில் நீலபேத படங்களாய் வெகுவிதங்களாகுமோ
ஸமர்த்தியான சராசரவாதிகள் ஸத்தையன்னியில் ஸுகியாகுமோ
நிருத்தி நிலையில்லாத நித்தியானந்த ரஸமறிந்துண்ண கூடுமோ
ஸத்குருஉபதேச மன்னியில் ஸதானந்த நிலையாகுமோ (ஜீ) 3

---

(ராகம்—சங்கராபரணம்)

## பல்லவி

மனதே என்னை கொல்லாதே (ம)
உன்சொல் யினிசெல்லாதே

## அனுபல்லவி

கொல்லாதே மனதே நீ குறையற்ற ஸுகமானேன்
எல்லாருக்குள் ளெண்ணெபோ லெங்கும் நிறைந்த (ம)
என்னை கொல்லாதே

## சரணம்

கனவுபோலேயிந்த பிரபஞ்சம் மனக்கல்பித மென்றதையறிந்தும்
அதைதனது பாவனை பண்ணி தானென்றுமெண்ணி
உன்னது,என்னது என்று யில்லாததை (ம) 1
யுண்டுபண்ணி கொல்லாதே

செல்லாப்பணம் செலுத்தப்படுமோ
ஜகத்தென்னும் பிரமைவிடுமோ யுன்னை
தள்ளிமெள்ள அத்தை தானே தானாகி (ம) 2
அல்லலற்று அகண்டானந்த ஸுகமானேன்

கானலை ஜலமென்று பிரமித்துக்கண்டு
கால்வலித்தோடி யிளைத்து ஸ்நான பானுசமனம்
பண்ண ஜலமற்று அகண்டஸாகரம் (ம) 3
கண்டு அமிழ்ந்தேன் உன்வசமாகேன்

ஸத்குருதயவினால் பார்த்து
ஸகல சின்மாத்திரமாய்தீர்த்து
நித்திய சுத்தபிரம்மமென்றும் நிஜபோதமென்றும் (ம) 4
சுத்தவெளிதன்னில் தேர்ந்தும் நிஜமானேன்

ஸ்வப்னஜாகிரம் விட்டு துரத்தி ஸுகளித்தமென்றதை
மலர்த்தி முழித்தால் பாலமிர்தமென்னும்
அகம்பிரம்மாஸ்மி என்னும் நித்திய அபரோக்ஷம் கண்டு (ம) 5
நிஜபோத ஸுகமானேன்

———

(ராகம்—மோஹனம்)

### பல்லவி

திரும்பவந்தால் வரட்டும் எந்த ரோகமும்
சேரவந்தால் வரட்டும் (தி)

### அனுபல்லவி

திரும்பவந்ததோர் ஜனனமரண ரோகம்
தீர்க்க மருந்து தந்ததேசிகரே வாரும் (தி)

### சரணம்

ஆத்மாவோ நிர்விகாரர் அந்தக்கரணமோ ஜடம்
சிதாபாஸன் மித்தியா பூதன் ஸுகதுக்கம் யாருக்கு
யினிஸாக்ஷி குருஸன்னிதானத்தினாலே
சிதாபாஸன் அகங்காரம் தானே புஜிப்பன் (தி) 1

பவக் கடல்துலைந்தால் நமக்கினிபடருது
கர்மவினைசேரவந்து நீங்கள்
தீர்ந்தமுறிகிழித்து வாரம் வையாமலே
வாங்கி புஜியுங்கள் (தி) 2

இந்ததேகம்விட்டா லுனக்கினி
வந்துதரப்போகிறுளோ ஸந்திபார்த்து
நீங்கள் வந்த கடமையை எல்லாம்
பந்தவீட்டில் தானே வந்துபுஜியுங்கள் (தி) 3

துடர்சீட்டு கிழிந்துவிட்டால் நமக்கினி
துடராது ஜென்மவினை வெங்கடேச மூர்த்திகிருபையாலே
எந்தன் சடலம்தான் பூமியில் வந்து
ஜெனியாமல் இருக்கட்டும் (தி) 4

---

(ராகம்—கல்யாணி)

பல்லவி

ஸம்ஸாரமாகிற ஸர்ப்பம் கிட்ட இருந்தாலும் (ஸ)
இனி எனக்கதல்பம்

அனுபல்லவி

அஸாரமென் றறிந்ததே கல்பம் (ஸ)
அவனியை பரிக்கிற ஆதிசேஷனே தல்பம்

சரணம்

குருமூர்த்தி வருவதற்கு முன்னே
கொத்தி பிடுங்கவந்தது சுற்றி என்னை
பரிபூர்ண ஹரிபக்தி க்ஷமைவந்த பின்பு (ஸ) 1
பயப்படாதே என்று சொன்னாரே என்னை

தவிக்கும்போது முன்வந்து குதித்தாரே
என் தாபத்திர யாக்கினியை தணித்தாரே
அவித்தை சாந்தி கெருடமந்திரத்தை ஜெபித்தாரே (ஸ) 2
அகண்டவிருத்தியாகிற தடியாலே யடித்தாரே

அருமையறிந்தவர் முன்னே ஆதி வெங்கடேசுவரர்
வந்து நின்றாரே திருவாயினால் நீயும் நானும் ஒன்றாய் (ஸ) 3
தேகேந்திரி பிரபஞ்சத்தை கொல்லாமல்
கொல்லுவோ மென்று சொன்னாரே

---

(ராகம்-மோஹனம்)

பல்லவி

இந்த ரகஸியம் சொன்னீரே யானல்
இருக்கிறே னுமக்கு ஸௌரந்தமாய் (இ)

அனுபல்லவி

அம்மையில்லாதொரு செல்விபிறந்ததும்
அப்பன் முலைகுடித்து அபிவிருத்தியானதும்
யாருக்கும் தோன்ருமல் அரூபமாய் சமைந்ததும்
அகோபலர் தயவினல் அதற்குண்மை அறிந்ததும் (இ)

சரணம்

க்ஷணமில்லாமல் பூதம்பிறந்ததும்
கல்பகம் தலைகீழாய் உத்பன்னமானதும்
கல்பசுகன்றுக்கு இரங்கிப்பால் கொடுத்ததும்
காற்றைபிடித்து கண்கலசத்தில் அடைத்ததும் (இ) 1

மலடிமகன் மனோராஜ்யம் ஆண்டதும்
வானத்து மலர்கொய்து நாரில்லாமல் தொடுத்ததும்
மச்சுகள் முயல்கொம்பு தச்சது சமைந்ததும்
மரித்தவன் படைவெட்டி ஜெயித்தவ னுண்டதும் (இ) 2

காலத்தில் பிறவாத தீய துர்ஜனன் செத்ததும்
கண்டத்தில் நாவில்லாதவன் புஜித்ததும்
காலத்தில் கந்தர்வநகரம் போயடுத்ததும்
கானல்ஜலத்தில் ஸ்நானம் பண்ணி பானம் செய்ததும் (இ) 3

பழுதையில்பாம்பு ஸ்தாணுபுருஷனை கடித்து
பயந்தோடி காலோய்ந்து பல்லுகள் தகர்ந்ததும்
பாருக்குள் நபும்ஸகன் ஸ்திரீபோகம் புஜித்ததும்
பட்டணத்தலங்காரம் பொட்டையள் கண்டதும் (இ) 4

இருசியோடு ஸத்புருஷன் போகம்புஜித்ததும்
இந்த ஆகாசத்தை ஓர்அம்புனலசைத்ததும்
ஏழுலோகத்து புழுதியை யிலக்கிட்டு குறித்ததும்
ஏழுகடல் ஜலத்தையும் எறும்பொன்று குடித்ததும் (இ) 5

(ராகம்—மோஹனம்)

### பல்லவி

சொல்லப்படாத ஸுகத்தை (சொ)
யனுபவத்தா லறியவேணும்

### அனுபல்லவி

அல்லல் படுத்துகிற மனமே யிதுவென்று (சொ)
காணப்படாது கண்டாய்

### சரணம்

அந்தகனுல் நவரத்னபரிக்ஷை யறிய முடியப்போமோ
கோடிகிரந்தாவலோகனம் பண்ணின திறுல் அகங்காரம்தான் சாகுமோ
கோடிமந்திரங்களை ஜபித்தாக்காலதனுல் ஸமபாவனை வருமோ
மணிமந்திரங்களானதோர் சித்தத்தில் விஞ்ஞானம் ஸ்வப்பிரகாச மாகுமோ மனமே (சொ) 1

இருளை யிரும்புலக்கயினு லடித்தோட்டினுல் போகுமோ
ஒருளருது உறந்துகரந்தாக்கால் அன்றெல்லாம் பிள்ளைக்கு பாலாகுமோ
அவனியிலுண்டான கர்மமெல்லாம் செய்தாலதனுல் அவித்யை போகுமோ
தத்வப்பொருளை ஸ்வானுபூதியில்லாதசாஸ்திரத்தா லறியப் போகுமோ மனமே (சொ) 2

கைநெல்லிக்கனியைக்காண கண்ணுடிபார்ப்பானேன்
மெய்யாபரணம் கழுத்திலிருக்க வீடெங்கும் தேடுவானேன்
பொய்யானயிந்த பிரபஞ்சத்தை தூரபிடித்துவிடுவானேன்
எங்கும் சரியாய் நிறைந்த பரபிரம்மம் தானென்றறிய அலைவானேன் மனமே (சொ) 3

காடாந்தகாரம் நிவாரணமாக்கி விளங்கும் பாஸ்கரனுர்
மூடமதியை துலக்கியே வைக்கும் குருவெங்கடேசுவரனுர்
தத்வபாடங்கள் சொல்லி பிரகாசமாக்கும் பரிபூர்ணதேசிகனுர்
பவவாரிதி ஓடம் கடத்தியே வைக்கும் சரணத்தை நன்றுய் பஜி மனமே (சொ) 4

(ராகம்-மோகனம்)

பல்லவி

ஞானநிஷ்டாள் மகிமை யுறைக்க நாவிலடங்காது (ஞா)

அனுபல்லவி

ஆனலவர்குணம் நானுமறிந்ததை
அன்பாக சொல்லுகிறேன் மிகவும் (ஞா)

சரணம்

ஆதியில்லாத சரீரத்தைக் கண்டறிந்து பிரமியார்கள் பிரரப்த
கர்மத்தைக்கண்டு மனதிலேபார்த்து மகிழ்ந்துகொண்டு
இதிலாஸக்திவைத்தால் அனர்த்தம் வருமென்றறிந்து மஹாத்மாக்களாய்
பித்தரைப்போலே ஜகத்திலிருந்தவர்கள் பிரம்மவிசாரம் செய்வார் மிகவும் (ஞா) 1

தாமரையிலேநீர்போலே ஜகமெல்லாம் தான்வேருகியிருப்பார்கள்
பூமியிலுள்ள புளியுமோடும் போலவே போகம் புசித்திருப்பார்கள்
நாமந்த பரபிம்ம மகமஸ்மி நாமென்று நன்ருயிருந்துகொண்டு
பாமரளை நல்லவார்த்தை சொல்லி பரிசுத்தமாக்கி வைப்பார் மிகவும் (ஞா) 2

சித்துக்குண்டோயிந்த தேகாதிபோகங்கள் சற்றும் தாளில்லை என்பார்கள்
கர்த்தாவாய் போக்தாவாயுள்ள ஜனங்களைக்கண்டே நகைத்திருப்பார்கள்
கர்த்தரைப்போலே ஜகத்திலிருந்து அவர்கள் பேதித்திருப்பார்கள்
பக்தாளே கேளுங்கள் பரமபுருஷர்களுடைய பாக்கியத்தை என்னசொல்வேன் மிகவும் (ஞா) 3

ஸ்தாணுபுருஷனைப்போலே ஜகமெல்லாம்தான் பார்த்திருப்பார்கள்
வீணுக்கன்ருே ஜீவனுகயிருந்தோமென்று மெத்த நகைத்திருப்பார்கள்
வேணத்தக்க கர்மம் வேதங்கள் சொன்னலும் மெய்யாக உண்மை கொள்ளார்கள்
சேஷித்த உலகமெல்லாம் நம்முடைய சித்விலாஸமென்பார்கள் மிகவும் (ஞா) 4

கந்தையும் பீதாம்பரமும் ஸமனுககண்டே மகிழ்ந்திருப்பார்கள்
தந்தையும் தாயும்போலே பக்ஷமாய் பிறரையும் பார்த்திருப்பார்
கள்

வந்தியாபுத்திரனுக ஜகமெல்லாம் வான்மயமாகயிருப்பார்கள்
முன்னிருந்தபடி யிருப்போமென்றும் முக்தியில்லை என்பார்கள்
மிகவும் (ஞா) 5

அந்தியில்லை ஸந்தியில்லையவர்களுக்கு அனுதினமும் வெளிச்சம்
சிந்தையில்லை ஸ்நானமில்லை யவர்களுக்கு சித்தாய் நிரைந்திருப்
பார்கள்

சிந்தையிலே பிரம்மாகமஸ்மி நாமென்றும் தெரிந்தும் ஸ்துதி
செய்வார்கள்

நிந்தனையில்லை யவர்களுக்கொருவஸ்து நிச்சயமாயிருக்கும் மிகவும்
(ஞா) 6

அவர்கள் உதரத்தில் நெல்லியிலையளவு அன்னங்களிட்டால்
பவரோகமற்று யினி பாரில் பிறவார்கள் இதுஸத்யம்
உபநிஷத்துக்களும் வேதங்கள் நாலும் உரைக்கும் அவர்மகிமை
ஜீவன்முக்தாளுடைய தீர்ந்தநிலைசொல்ல ஆதிசேஷனுக்கும் முடி
யாது மிகவும் (ஞா) 7

அவர்களிருக்கும் ஸ்தலங்கள் அறுபத்தாருகோடி தீர்த்தம்
அவர்களிருக்கும் ஸ்தலங்கள் ஆதிகாசி கைலாஸம்
அவர்களிருக்கும் ஸ்தலங்கள் தில்லையம்பலம் மாயூரம்
அவர்களிருக்கும் ஸ்தலங்களுக் கொப்புயாருலும் சொல்லப்போ
மோ மிகவும் (ஞா) 8

---

(ராகம்—கல்யாணி)

பல்லவி

மானத்துடனேபோடி மாயை மானத்துடனேபோடி (மா)

அனுபல்லவி

வானொத்தகுரு வெங்கடேசுவரரிங்கே ஒரு தியானத்திலுண்டு
அவர் ஞானத்திலுண்டு சொன்னேன் (மா)

சரணம்

வாஸனுவசத்தாலே வந்தவழிகள் அறிவேனடி
கோசத்துக்கப்பாலே நான்குடியிருப்பதறியாயோடி
பாசக்கொடியறுந்தும் ஆசைக்கடல் கடந்தும்
வாசல்படி கடந்தமாசற்ற ஜோதியடி (மா) 1

தத்வமறிவேனடி என் கிட்டே தாறுமாறு ஏண்டி
சித்ருபனடி எங்கும் சிறந்த ஞானமடி
வஸ்துவிலையை நானுற்றுணர்ந்த பரிசுத்த
ஸ்வரூபனுன அத்விதீயம் நானடி (மா) 2

குஷ்டரோகமயம் உன்குஹ்யம் தீண்டிப்பிறவேனடி
கிட்டகூடாதுபோடி நாதாந்த திருஷ்டிஎனக்குண்டுபோடி
பட்டப்பக விருட்டை கிட்டவரவொட்டுமோடி
துஷ்டமாயை ஞானம்சுட்டு விரட்டுமடி (மா) 3

---

(ராகம்-கேதாரகௌளம்)

## பல்லவி

இவருக்கு நானென்ன செய்தேனோ தெரியாது
என்னையிப்படி செய்தார் (இ)

## அநுபல்லவி

கயிறும்தோண்டியும்போலே காயத்தோடிருந்த என்னை
காளையும் கடுவாயும்போலவே காயமெனக்கிருக்க தாமாக்கினர் (இ)

## சரணம்

பெண்டுபிள்ளையில்லாமல் பேருமூருமில்லாமல்
நன்றுதீதொன்றுமில்லாமல் நாட்டில் வழக்கில்லாமல்
கண்டகர்மங்கள் செய்ய கால்கையுடலில்லாமல்
அகண்ட பெருவெளியுருவமாயொரு ஆதரவுமில்லாமல்செய்த (இ) 1

[யாது
புதுப்பானையைப்போலே போகமெனக்கில்லாமல்
பூமிவிஷயமும் பொய்யாய் மதுவுண்டநாவினுல் நீறுண்ண அறி
சதுர்வித மறைகள் புராண சாஸ்திரமதிலே (இ) 2
எள்ளளவு மாசையில்லாமல் செய்தார்

அசுவத்தபிரதக்ஷிண மாதித்திய நமஸ்காரம்
அகிலகர்மங்களெல்லாம் விசுவாஸமாகசெய்து
விருத்தியொழிக்க செய்தார் ஈசுவரமாமிந்த நாட்டில் (இ) 3
எங்கள் நாதன்குரு வெங்கடேசுவரராய்

---

(ராகம்-எதுகுல காம்போதி)

பல்லவி

உன்னைத்தவிர வேறேயில்லை என்றுபதேசம்செய்த
குருவை நான் மறவேன் (உ)

அனுபல்லவி

முன்னேசெய்ததபம் மூர்த்தி கரித்துவந்தும்
மோகம் தீர்க்க வெங்கடேசுவரருய் வந்தும் (உ)

சரணம்

பூதமும் வேறல்ல பொரிபுலன் வேறல்ல
வாதமும் வேறல்ல வாக்கு விவகாரமல்ல
ஸாதனையினுலே நாமருபத்தை தள்ளினுல்
வேதம்கடந்த பொருள் ஆகுமென்ருரவர் (உ) 1

ஆதியும் நானே அனுதியும் நானே
சோதித்தறிந்து கொண்டேன் ஜோதிமயமாய் என்னை
வாதிக்கும் வேதமெல்லாம் வாக்கியார்த்தானுபவம்
சோதித்தறிந்து அகண்டபூர்ணமானேன் நான் (உ) 2

கையென்றும் காலென்றும் காடென்றும் புரமென்றும்
பொய்யென் றறிந்துகொண்டு புகழ்ந்துகொண்டேன்
என்னை மெய்யென்று சுருதியுக்தி யனுபவத்தினுலுள்ளம்
கைநெல்லிக்காய்போலே காட்டினுரனுபவம் (உ) 3

பட்டையுடுத்தி பணிபூண்டு திரியுமந்த
பாக்கியம் வேறல்ல பார்க்க மனேவிகாரம்
கட்டையில் கள்ளன்போல் காணும் பிரபஞ்சமிது
சுட்டுக் கரைத்து ஸுகஸாகரமானேன் (உ) 4

---

(ராகம்-ஸௌராஷ்டரம்)

பல்லவி

வாக்குக்கும் மனஸுக்கும் எட்டாத வஸ்துவை
வானிலே கண்டுகொண்டேனே (வா)

அனுபல்லவி

யாருக்கும் கிடையாது ஆனந்தமானந்தம் பார்க்க கண்ணாயிரம்
[வேணும்
அத்தைபார்க்கிற பேருக்குகாணும் தேவர் யாருக்கும்
[கிடையாது காணும் (வா)

சரணம்

ஸத்துசித்தானந்த ஸம்பத்துண்டாகியே சாசுவதபிரம்ம
[மிதென்றும்
அனுருத ஜடதுக்கமான மனஸுக்கு அன்னிய மன்னிய
[மென்னும்
எந்தன் சித்தத்திலேகண்டு சேஷித்து நின்றது
சிதாபாஸனே யல்லவென்றும் பரம அத்வைதப்பொருளே
அகமென்றும் அறிந்தநிலையிது வென்றும்
ஜீவன்முக்தி ஸுகமிதுவென்றும் (வா) 1
யோக நித்திரை தன்னிலே தோன்றும்

கர்மவலைகளை கண்டிக்க நானொரு
கத்தியெடுத்துகொண்டேனே
இந்தகர்மபவ பலஜன்ம விகாரத்தை
தானே தவிர்த்துகொண்டேனே
இந்தபொம்மைக் குள்ளே புறம்பாயிருக்கிறபோதம்
அறிந்துகொண்டேனே எங்கும் தன்மாய்க்கண்டேனே (வா) 2
நல்ல மர்மமறிந்து கொண்டேனே

நாசசரீரத்திலே காட்டினாரே நால்வேத சாஸ்திரத்தினாலே
பஞ்சகோச புரமென்னும் கோட்டையை யிடித்த குருவெங்க
[டேசுவரராலே
யாரும்பேசாத பேச்செல்லாம் பேசிக்கொண்டு நான்
புகழ்ந்து யிருக்கையினாலே பின்னும்
காசாசைகொண்டு கலங்கினபேர்களுக்கு
காரியமில்லாததினாலே எங்களீசன் (வா) 3
குருநாதனாலே மூன்றுவாஸனையு மற்றதினாலே

(ராகம்-சுருட்டி)

பல்லவி

அகப்பட்டு கொண்டாயா சித்தா
நீ அகம்விட்டு நின்றாயா (அ)

அனுபல்லவி

அகப்பட்டுகொண்டாயா ஆனந்தவாரிதியில்
கூப்பிட்டும் கேளாத குணாதீதரஹஸ்யத்தில் (அ)

சரணம்

கண்கொள்ளா ஜோதிமயத்திலே களங்கமற்ற நிர்பயத்திலே
நித்தியானந்த கூடத்திலே நிஷ்களானந்த புரத்திலே (அ) 1

ஏகமானயிடத்திலே ஏழுமாறும்பதத்திலே
போகமற்றயிடத்திலே பிரம்மானந்த மதத்திலே (அ) 2

பத்துமாறும் பதத்திலே பஞ்சவர்ணமற்ற நிறத்திலே
ஸித்தியான ஸ்திரத்திலே சிதானந்த புரத்திலே (அ) 3

---

(ராகம்-ஸௌராஷ்டரம்)

பல்லவி

ஏதென்று யினிநான் சொல்வேன் என்ஸ்வாமிநாதா
ஏதென்று யினிநான் சொல்வேன் (ஏ)

அனுபல்லவி

யோக ஸித்தாந்த வேதநாதன் செய்த ஹிதத்தை
என் குருநாதன் செய்த ஹிதத்தை (ஏ)

சரணம்

அப்போதே தூணில் உதித்ததும் அன்று பிரஹ்லாதருக்கு
சென்று தாபம் தீர்த்ததும் ஸ்வாமி
யிப்போதெனக்காய் வந்ததும் இதம்சொல்லி
அரசடியில் யிந்தவேஷமானதும் ஸ்வாமி (ஏ) 1

அஸ்திபாதிபிரியம் பிரித்ததும் அகண்ட
ஸச்சிதானந்தம்நீயே பிரம்மமென்றதும் ஸ்வாமி
எத்தியே மோக்ஷமளித்ததும் ஏகமே வாத்விதீயம் (ஏ) 2
நீயே பிரம்மமென்றதும் ஸ்வாமி

அடிக்கடி வலைவில்வந்ததும் அகம்பிரம்மாஸ்மி
என்று ஆணைபாஷையிட்டதும்
துடுக்காய் பேதமறுத்ததும்
ஸோயம் தேவதத்தனைப் போல் பரிபூரணமாய் நிறைந்ததும் (ஏ) 3

அருவிபோல் கருணைவைத்ததும் அடிக்கடி வரும்
ஜன்மம் ஆற்றிமாற்றிப் போட்டதும் ஸ்வாமி
பரவி எங்கும் நிறைந்ததும் பார்த்து (ஏ) 4
ஜீவபிரமை போக்கி தீர்த்து ஆண்டவிதத்தை நான்

---

(ராகம்-மத்தியமாவதி)

பல்லவி (பி)

பிரம்மானந்தத்தை கண்டு பேசாதிருமனமே

அனுபல்லவி (பி)

தர்மமோ யிதுசொல்ல தரணியோர்களுக்கு யிந்த

சரணம்

வேதாதீதமாகியே விதிநிஷேதமில்லாமல் (பி) 1
போதானந்த ரூபமாய் பூரணவடிவாய் நின்ற

ஸர்வபரிபூரண ராகியே ஸச்சிதானந்தராகியே
கமனமும் ஒடுங்கியே கேவலாத்மாவில்கூடியே (பி) 3

நித்தியானந்தராகியே நிர்விஷயானந்தராகியே
ஸத்தியஞானனந்த சாசுவதராகியே (பி) 4

ஸங்கவர்ஜிதராகியே ஸமரஸ வடிவாகியே
வெங்கடேசுவர தேசிகர் விமலபோத ரூபமாகியே (பி) 5

---

(ராகம்—ஆரபி)

பல்லவி

ஐயாநீர் தந்த ஆனந்தமானாலும்
அதிசயமாகவே தோணுதையா (அ)

அனுபல்லவி

மெய்யானகுரு வெங்கடேசுவர நாதனே வேதாந்த வேத்யனே
நாதாந்தமூர்த்தியே (அ)

சரணம்

கண்டமில்லாமலகண்டமாய் தோணுது
கருவிகரணங்கள் கண்டாலும் வீணது
அண்டமுனிவர்கள் ளும் தானென்றுதோணுது
அடிநடுமுடிவுயில்லாமல் வான் தன்னை பூணுது (அ) 1

பழகப்பழகமெத்த ப்ராக்கியம் வருகுது
பரமஸுகானந்த பரவசம் தருகுது
அழகானஅறிவுத்தியால் அங்கமெல்லாம் உருகுது
ஆனந்தவெள்ளம் கங்குகரையற்று பெருகுது (அ) 2

கருணைமிகுந்த கடாக்ஷத்தினுலிந்த
காக்ஷியைகண்டு கலந்து உல்லாஸமாயிர்ந்த
அருணபிரகாசம்போல் அண்டமெல்லாம் நிறைந்த
அறிவோடு மகிமையை யாரோடு சொல்லுவேன் (அ) 3

---

(ராகம்—தன்னியாஸி)

பல்லவி

அவித்தை வசத்தையடையாதே மனமே
ஆனந்தாப்தியில் அமர்ந்திருப் மனமே (அ)

அனுபல்லவி

கொஞ்சமாய் ஒருவித்தை படித்தால்
பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணமண்டலத்தில்
மிஞ்சினபேருண்டோ என்பார்
கொஞ்சியே கர்வத்தை யடைந்து கொக்கரிக்கும் மனமே (அ)

சரணம்

பக்தஜனங்களான பேர்கள்மனமே
உத்தமசுலோசனை கீர்த்தனம் செய்தால்
கத்துகிருளென்று சொல்லுவார் (அ) 1
ஸர்வகாலமும் காது கேட்கப்படாமல் கரிக்கும்

ஸாதுக்கள் கதையை கேட்கமனமே
சிரத்தை யுள்ளவன்போலே வந்து தலையாட்டி கேட்கும்
வாதுக்காகிலும் யிங்கே வருவார் (அ) 2
மகத்தான தர்க்கத்தால் வாய்மூட அடிக்கும்

அஞ்ஞானமானதோர் விருக்ஷம் மனமே அதில்
அநுதினமும் காமகுரோத லோபமோகங்கள் தளிர்க்கும்
ஞானமாகிறகத்தியாலே அதை வேரோடு வெட்டி (அ) 3
வெங்கடேசுவரரைச் சேராய்

---

(ராகம்--புன்னாகவராளி)

பல்லவி

ஆட்டிமானே அகண்டமென்று ஆட்டிமானே (ஆ)

அனுபல்லவி

ஆட்டிமானே அஸங்கோஹம் நானேபார்வையில் (ஆ)
வேரற்ற பிரத்தியக்கு பிரம்மம்

சரணம்

நானாவாய் பார்த்து பிறபஞ்சத்தில்
நானின்னதென்றாடியகூத்து தானாக சைதன்யம் வேறாகதீர்த்து
தத்துவம் பதார்த்த ஸ்வரூபமே சித்து (ஆ) 1

சித்தே ஜகத்து தேஹம் எனக்கென்னபிரதக்கு
நித்தியானந்தோஹம் நிலையிப்போ எனக்கு
நிற்குணானந்தத்தில் கொண்டு ஒடுப்பிக்கும் (ஆ) 2

பற்றுதலற்று பரானந்தமேலடி
உற்றுமானாபிமானா மயக்கத்தை
தீர்த்து ஆடாமலாடுமிந்த ஆனந்தகூத்து (ஆ) 3

தான்பிறரற்று ததாகாரமே வடிவுற்று
ஏங்காமல் எதுவந்தாலும் நிலைத்து
தூங்காமல் தூங்கும் ஸுகானந்த கூத்து (ஆ) 4

---

# கோலாட்ட பாட்டு

ஆதியில் ஒன்ருனுய் கோலே அப்புறம் இரண்டானுய் கோலே
வேதமும் அறியாக்கோலே வேதாந்தகோலே 1

காடுமேடெல்லாம் திரிந்தாய் காமவேதை கொண்டலேந்தாய்
வீடறியாமல் மெலிந்தாய் மெத்தவேநொந்தாய் 2

சொன்னவகையை மறந்தாய் ஸ்வயபுத்தியை துறந்தாய்
என்ன மெய்யென்றிருந்தாய் ஏண்டா பிறந்தாய் 3

நத்தையாய் புழுவாய் நண்டாய் நரியாய் குருவாய் வண்டாய்
எத்தனே ஜென்மமோ கொண்டாய் என்னதை கண்டாய் 4

எப்போதும் நன்மைவேணும் ஈச்வரானுக்கிரஹம் வேணும்
ஸாதனஸம்பத்து வேணும் ஸத்குருவேணும் 5

காசிராமேசுவரம் சென்ருய் காகம்போல் முழுகியே நின்ருய்
உன்னுசை போச்சோ மூடாஎன்ருல் ஆச்சுதோ நன்ருய் 6

அண்டகோளம் எல்லாம் சுற்றி அணுவணுவாக பற்றி
ஒண்டியாய் திரிந்தாய் யுக்தி ஓஹோ உன்புத்தி 7

போற்றியார் அடிபணிந்து பந்துக்களும் வீடும்விட்டு
கூத்துவ னழைக்கும்போது கூடவராது 8

புருஷன் பெண்டாட்டி பொய்யே புத்திரன் பிதாவும் பொய்யே
பெருமை சிறுமை பொய்யே பிரம்மமே மெய்யே 9

ஆகாவழிக்கதிதூரம் ஆத்ம அனுத்மவிசாரம்
தொகுத்து பார்க்க இதுநேரம் தோன்றுமே ஸாரம் 10

---

(ராகம்—சங்கராபரணம்)

## பல்லவி

சேர்வதும் எப்படியோ ஸ்ரீஸத்குருபாதம்
சேர்வதும் எப்படியோ (சே)

## அனுபல்லவி

மங்களமான மஹாராஜஸ்ரீ குரு
மலையாசலம் வந்து மகிமை யறியவென்று
இங்கிதமாகவே எடுத்து உரைத்திடும்
மங்களமாகவே கேட்டு புகழ்ந்திட (சே)

## சரணம்

அன்னைக்கருக்குழியை கடத்திவெளியில்
வந்து சொல்லப்படாத துக்கத்தை அனுபவித்து
வெல்லப்படாத மஹத்துக்கள் சரணத்தை
காணப்படுமிந்த கருத்துக்குள் அறிவை (சே) 1

அஞ்ஞானகாயம் அழுக்கை விளக்கியே
அந்தகாரமான மாயை துலக்கியே
பிரஞ்ஞானமான பிரகாசம் ஜ்வலிக்கவே
பரபிரம்ம ஸ்வரூபத்தை பார்த்து பணியவே (சே) 2

வலைக்குள் அகப்பட்டு தயங்கு மத்ஸ்யம்போல்
ஸம்ஸாரதுறையிலே ஸுஷுப்திபோல் முழுகாமல்
நிவிருத்திக்கரையில் நின்று நினைவை தெளியவைத்து
நிற்குணபிரம்மத்தை நிலையாக நிருத்தியே (சே) 3

ஸ்ரீவெங்கடேசுவர குருவையனுதினம்
பாதாரவிந்தத்தில் பணிந்திடுவாயே
பரமகுருவின் பாதம் பணிந்திருப்பாயானால்
நித்யானந்த ஸுகம் அனுபவிப்பாயே (சே) 4

(ராகம்--கோமதி யருள்புரிவாய் என்ற மெட்டு)

## பல்லவி

ஆனந்தம் ஆனேன் நானே ஸச்சிதானந்தம் ஆனேன் நானே
பரபிரம்மானந்தம் ஆனேன் நானே (ஆ)

## அனுபல்லவி

ஊனுருட லு மற்று நானவிகாரங்களற்று
தானாக எங்கும் தோற்றி நானாக எங்கும் தோற்ற (ஆ)

## சரணம்

மாயாவிகார்மற்று மந்த ஹாஸப்பொருளை
ஏகாந்த நிலையுற்று ஏகாந்த (ஆ) 1

கர்ம பந்தங்கள் அற்று கைவல்யஸுகம் தந்த
பிரம்மநிலை யடைந்து (ஆ) 2

அவித்தை வினைகருகி ஆனந்தஸுகம் தந்த
ஸ்ரீவெங்கடேசுவர குருவை சேர்த்து (ஆ) 2

---

## குயில் கண்ணி

ஸ்ரீகுருபாதம் தன்னை குயிலே சிந்தித்திருந்தயானால் ஜென்ம
சிரஸின்மேல் கையை வைத்தால் குயிலே-பறந்திடும்
வினை

வினைகள் தீரவென்றால் குயிலே-வினயம் வேணுமடி
கவலையே துக்கடி குயிலே-மாயாகல்பிதமடி

முக்திவேணுமென்றால் குயிலே-யுக்திவேணுமடி
பக்தியுதிக்குமடி குயிலே-சிரத்தையதாகுமடி

பொறுக்கவேணுமடி குயிலே-பொல்லாத துக்கங்களை
தள்ளவேணுமடி குயிலே-தத்வதிருஷ்டியினுல்

வெறுக்கவேணுமடி குயிலே-விஷயபோகங்களை
இழக்கவேணுமடி குயிலே-இந்திரியவிருத்திகளை

மனமும் பொய்யடியோ குயிலே-மனக்கூடும் பொய்யடியோ
இனமும் பொய்யடியோ குயிலே-தனமும் பொய்யடியோ

பிரம்மானந்தத்திலே' குயிலே-பூரணமான வஸ்து
காமகுரோதங்களற்ருல் குயிலே-ஆத்மவிசாரணையால்

பக்குவம் வந்தபேர்க்கு குயிலே-பழுதில்லை நிச்சயமே
அஞ்ஞானகாரணத்தை குயிலே-பழுதில்லை நிச்சயமே

மாயாபிரபஞ்சம்தன்னில் குயிலே-மனதைநான் வைத்திருந்தேன்
மஹாகுருபாதம் கண்டு குயிலே-மறந்தேன் இசத்தாசை

நேரில் இழுத்தாரே குயிலே-அகோரஸம்ஸாரம். தன்னை
நிச்சயமாய் நம்பி இதை குயிலே-அல்பஸுகம் கொண்டேனிப்போ

ஸம்ஸாரம் தன்னை நம்பி குயிலே-தலைகீழ் தெரியாமல்
அறிவில்லாமலிருந்து குயிலே-ஆசை வில்லை பூசிக்கொண்டேன்

சித்திரபடம்போலே குயிலே-தோன்றும் பிரபஞ்சமெல்லாம்
இதுக்கர்த்தமில்லை என்று சொல்லி குயிலே-அனுகிரஹித்தார்
ஸத்குருவும்

குருவை வணங்காமல் குயிலே-கோடி ஜென்மமிருந்தேன்
ஸ்ரீவெங்கடேசுவர குருவால் குயிலே-துரீயநிலையடைந்தேன்

———

# வேதாந்த ஞான ரஸ கப்பல்

அகண்ட ஸத்சிதானந்தம் சிவோஹம் சிவோஹம்

பரிபூர்ணமாய் விளங்கும் - அகோபலர் ஆத்மதத்துவர் - ஸ்ரீநரஸிம்ஹ குருமூர்த்தி - அபரோக்ஷ குருசரணம் தன்னில் - அனுதினமும் நான் பணிந்தேன் - பரஞ்ஜோதியாய் விளங்கும் - பிரணவமென்னும் கணபதிக்கும் - சிவரூபிலக்ஷ்மீக்கும் - ஸ்ரஸ்வதிக்கும் சாம்பவிக்கும் - கதலிப்பழம் நாளிகேரம் - கடலைப் பொரி அவல் பயரும் - விடு தயிருல் - பச்சடியும் வெண்மையான பொரிக்கரியும் - துய்ய வெள்ளை சாலியன்னமும் - சேர்ந்த தொருபால் குழம்பும் - குரு உமக்கும் பூஜை செய்தேன் - குறையறவே நிறை வேற்றும் - இந்த தொலையாத ஜென்மந் தன்னை - எடுத்து நித்தியம் அலுத்தெனக்கும் - உம்முடைய ஹிதமாகிய வாக்கியத்தால் - என்னை எளிதாகக் கரையேற்றும் - இந்த பவமாகிற ஸாகரத்தை - கன்று குழமபடி போல் கடத்தி - ஸுகமாகிற கரைசேர்த்தால் - ஸ்வப்பிரகாசர் பதம் துணையே - இந்த கலியுகத்தில் - அகம் மகிழ்ந்து. அவித்யா கல்பிதத்தால் - நிஜம் மரந்து உம்முடைய - ஸ்வரூப ஸுகமறியாமல் - இந்த ஜகம் அலைந்துபோகிறதென்று—அந்த ஷண்மதத்தை கண்டித்து - ஸ்வாமி ஸர்வஞ்ஞபீடமேறி - தம்முடைய வித்தையினுல் - ஸ்வாமி ஸர்வாபீஷ்டமடைந்தோம் - உயர்த்தியுள்ள அத்வைத நிஜத்தை உத்தரிக்க வந்துதித்தீர் - அதை கப்பலதாய் நான்பாட - ஸ்கந்தன் கணபதியே முன்நடவும், சிவோஹம் - சிவோஹம்.

(முடுகு)

ஆகமபுருண வேதமோடு இதை அறுபத்தி நாலுகலை அறு நான்கு தத்துவம் - சதுர்வேத சாஸ்திர தர்க்கசாஸ்திரத்தில் - ஸாரமதை தெரிந்தெடுத்து தன் மயத்தை பார்த்து - ஸாதன புருண சுருதி சதுரானவாக்கியத்தில் ஸாரபதை தெரிந்தெடுத்து - தன் மயத்தை சேர்த்து - ஆரணத்தில் உபநிஷத்தில் - கோடி கிரந்தம் பார்த்து - உபநிஷத்து வாக்கியத்தால்-வேதாந்தம் ஸாதித்த காரணமான ஆசாரியர் - கை வல்யம் தந்தார் - அந்த நிஜமதை நான் ஓடமதாய் பாட - குருநாதர் உண்டு துணையே. ஏலேலோ ஏகரஸம்

(வேறு)

நித்தியரத்தின பலகை சேர்த்து நிர்மலமாய் ஆணியிட்டான் - ஸத்தியவஜ்ரதூண் நாட்டி ஸமரஸமாய் வலை போட்டான் - சொரூபத்தில் போதரஸம் ஸ்வரூபமதில் மேல் மேய்ந்தான் - கரடில்லா ஆணிமுத்துசரங்கள் கட்டி எங்கும் அலங்கரித்தான் - நிகரில்லா தாழ்வரையும் நிகரற்ற கொடுங்கைகளாம் - நிர்ப்பயமாய் [illegible] ஓடவைத்த

தங்கமிட்டான் - நிர்மலமாய் மூகப்பு ரவிஸ்புரணையொத்த ஜாதி ரத்தினம் - சதுரமொத்த படியழகும் - கோசாதீதமான நல்ல வஜ்ர - கொடி முடியும் வாசல்களாம் - ஸர்வாதீதமான ஸர்வோன்னத குருவிருக்கும் - உன்னிதமாம் வாசல்களும் உயர்த்தியுள்ள மேடைகளும் - அவர் தாமே தாமாய் விளங்கும் - வஜ்ர தலையணையும் மெத்தைகளும் - அவர் ஸ்வயமே தாமாய் விளங்கும் - ஸ்வர்ண தூக்கு - மஞ்ச சியாமளையும் - சுத்தார்த்தமாய் விளங்கும் - ஸாதனம் தொட்டாட்ட சங்கிலியும் - குருபக்தி என்னும் - தொடுங்கையினால் விசிரி பரிமளிக்கும் குமகுமென - ஸ்வபிரகாச கண்ணாடி கட்டி - துலங்கும் நல்ல ஜாலர்களாம் - பிரும்ம வித்தையென்னும் ஸ்வயஞ்ஜோதி ஸ்வரூபம் - விளங்கும் நல்ல தீபங்களாம் - உபமான மற்ற கப்பல் - அதற்கு ஓட வைத்த தங்கமிட்டான் - நித்திய ரென்னும் சங்கரரை ஆசாரியராய் நிர்ணயித்தான் - கப்பல் தன்னில் நிஷ்களங்க - வேதாந்த ரத்னம் தன்னை - சேர்த்துவைத்தான் - அத்புதமாம் ரத்னம் தன்னை எடுத்து - வகைவகையாய் வாரியிட்டான் - மஹா வாக்கிய சுருதி உபநிஷத்தால் - செட்டி வளைய எங்கும் காவல் வைத்தான் - பரஞ்ஜோதியாய் விளங்கும் பிரணவமென்னும் முத்திரையிட்டான் - ஜாக்கிர ஸ்வப்ன ஸுஷுப்திகளுக்கும் - ஸாக்ஷியாக தானிருந்தான். சிவோஹம் - சிவோஹம்

(முடுகு)

ஸச்சிதானந்த ஸ்வரூபமென்றே சொல்லு - தன்னை விட வேறே ஜகமில்லையென்றெண்ணு - நித்தியமாய் கப்பலிதை நிர்ணயமாய் தள்ளு - ஸத்யமிது ஸத்யமிது ஸாத்யமென்று சொல்லு - காருயணையைவ பிரும்மை வாஹம் - நாமரூபமறிந்து தள்ளு - காமகுரோத மற - கப்பல் தன்னில் கள்ளரெல்லாம் மெள்ளவாரார் - பையதப்பிபோமுர் - போடு பீரங்கி - போடுபிரணவம் - போடு தத்வமஸி பீரங்கி குண்டை ஏலோலோ ஏகரஸம்

(வேறு)

பவமாகிய ஸாகரத்தில் - அநாதிவாஸனையாகிற மகரமத்ஸ்யம் - அதற்கு ஈஷணை மூன்றையுமே யிறையாக பலி கொடுத்தான் - ஸாது ஸங்கம் தனைகூடி தப்பி கடத்திவிட்டு மெள்ளமெள்ள அகம் - மமதை என்னுமுதலை கப்பலை ஆழி தன்னி லாழ்த்தி விடும் - உம்முடைய ஹிதமென்ற வாக்கி யத்தால் எளிதாக கடத்தி விடும் - அகங்கார இருளான அவித்யை என்னும் நீர் மனுஷ்யன் - கண்தூங்காமல் துறையிருந்து - தினமும் வழிமறைப்பன் கப்பல் தன்னை - நீங்காத ஸ்வரூப ஸுகம் தன்னில் - நிதித்தியாஸத்திலிருந்து - பவமாகிற ஸாகரத்தில் பயங்களுண்டு வழிதன்னிலே - கலங்காமல் பார்த்து மதை - கானல் ஜலமென்று மருளாமல் சிவோஹம் - சிவோஹம்

(முடுகு)

அலையாமல் மனம் நிறுத்தி அந்தரத்தை பார்த்து - பொய்மைகளற்று செய்கைகளற்று - கல்விகளற்று காரணத்தையுற்று - சொல்லுக்களற்று, ஸ்வரூபத்திலுற்று - அந்தணமறை யோகியற்கும் வந்தனமளித்து - வந்தகுரு சொன்னதொரு மந்திரத்தைபெற்று - பந்தமற்று மோக்ஷமுற்று வித்தைகற்று - அந்தமற்று ஆதியற்று ஆத்மஸுகம்பெற்று ஏலேலோ ஏகரஸம்

(வேறு)

ஸத்தியமாம் கப்பல்தள்ள - அதற்கு ஸாதனங்கள் நாலுமுண்டு - பிரப்மம் நித்தியம் என்னும் சுருதியாகிற கம்பால் - பலத்தூன்றி நிலைபார்த்தான் - ஜெகமனித்யமென்ற சொல்லாகிற' துடிப்பால் - திசைநோக்கி துணிந்து வந்தான் - யுக்தியினால் ஓடிவரும் அதற்கு ஓங்கார பாய்மரமாம் - சிரத்தை என்னும் வழியறிந்தும் கப்பல் தனித்துவரும் வெள்ளத்திலே. - சித்தபிரமையாம் திட்டிருந்து கப்பல் சின்னம் தட்டிபோகாமல் - அப்பிரமையாம் பிரஞ்ஞையினால் - அதிதூரம் நடத்திவந்தான் - பாவமென்னும் பாழ்தன்னிலே பாய்ந்தோடம் தாக்காமல் - நிற்பாவமென்னும் தண்டெடுத்து நிர்ணயமாய் நடத்திவந்தான் - குரோதமென்னும் கொடுங்குண திரயத்தால் - கொடுங்காற்று வீசாமல் - உபசாந்தமென்னும் தண்டெடுத்து - யுக்தியினால் நிச்சயமாய் தள்ளிவந்தான் - அவித்தையான ஆழிமுதலை அடித்துக்கப்பல் அலையாமல் - சிவோஹம் - சிவோஹம்.

(முடுகு)

பிரஞ்ஞையென்னும் பதமெடுத்து - பிரணவம் தன்னை சேர்த்து - பரபிரம்மவஸ்துதனை பதறும்ல் பார்த்து - அத்வைத பிரம்மம் தன்னை அசையால் நிஜநிறுத்தி - தன்மயமேயாகி நிஜ ஸாராம்சத்தை பார்த்தான். ஏலேலோ ஏகரஸம்

(வேறு)

காமகுரோத கள்ளருண்டு - கப்பல் கரையோரம் போகாமல் - தாமஸராஜஸகுணமாம் அலையை - நிறுத்திமென்ன ஸாப்தீகத்தால் - ஏகவெளி தனை காட்டி - கப்பல் - இறங்காமல் பாம்பனாற்றில் - போதமென்னும் கப்பல் தள்ள செட்டி - வெகு ஜென்மமாய் பழகிவந்தான் - மோசமது வாராமல் கப்பலை - முன்னதாக நடத்தி வந்தான். சிவோஹம். சிவோஹம்.

(முடுகு)

வேதாந்த மானதொரு கப்பல் வருதய்யா - மெஞ்ஞான ஜனங்களுக்கு பார்ப்பதற்கு மெய்ப்பாய் - மோஹாந்தகாரம் தன்னிமுக்தி வருதப்பா - ஏகாந்தமான துறை இறங்கியதுகாண் கப்பல் ஏலேலோ ஏகரஸம்

(வேறு)

ஸ்வஸொஸ்வரூப செட்டியவன் துறை அறிந்தே நடத்தி வந்தான் - லெக்ஷியத்தால் பார்த்தவனும் நிர்ணயமாய் நடத்திவந்தான் - அசையாமல் இருபுறமும், அம்பரத்து அம்புலிபோல் - விசையாக நடத்தி வந்தான் - விஞ்ஞான கப்பல் தன்னை - நாதாந்த வழிநாடி நாமமில்லா யிடம் தேடி - ஜோதிர் மய துறைசேர்ந்து கப்பல் - சிவோஹமென்று நிலைத்தது காண். சிவோஹம் - சிவோஹம்

(முடுகு)

காலத்திரயங்களென்னும் தீவுதன்னை கடந்து - அவாச்சியமாய் வந்ததாம் - விஞ்ஞான கப்பல் - சரீரதிரயமென்னும் தாழ்வரையை கடந்து யதார்த்தமாய் வந்ததாம் மெஞ்ஞான கப்பல் - அவஸ்தா திரயங்களென்னும் - ஆரண்யம் கடந்து - ஸாக்ஷியாய் வந்ததாம் சைதன்ய கப்பல் - பஞ்சகோசங்களென்னும் பட்டணம் கடந்து பரமார்த்தமாய் வந்ததாம் பரிபூர்ண கப்பல் ஏலேலோ ஏகரஸம்

(வேறு)

கல்மஷங்கள் அற்ற கப்பல் - கரையோரம்போகாமல் நிச்சயமாமிந்த மனுவசனம் - நிறைந்தக்ஷமை புத்தி மந்திரி - சின்மயத்தில் நிறைந்திருக்கும் ஜீவனென்னும் ராஜனவன் - பக்குவசித்த ராஜனவன் - பல ஜென்மமாய் பழகிவந்தான் - எத்தனையோ கோடி ஜென்மம் இருந்து தபஸு பண்ணும் யோகிகட்கும் - கிட்டாதபோத ரத்னம் - துருஸாய் கிட்டி வந்தான் துறைசேர - இக்ஷணமே நீங்கள் சென்று இறக்கி கப்பல் வருமென்றான் - சட்டமிடும் மந்திரியும் புத்திதளவாயும் அனுப்பி வைத்தான் - ஏகரஸ பல பிராப்தி அடைய - ஏத்தரத்தின ஜோடணிந்தான் - மோக்ஷஸாதனமாய் இருக்கும் - தேஹத்தங்க தண்டிகைமேல் ஏறிவந்தான். சிவோஹம் - சிவோஹம்.

(முடுகு)

சித்துதய முக்தி பெண்கள் - தோகையர்கள் பாட - பேதலவலேச மற்ற பேரிகைகள் அடிக்க - நாலுவித சாஸ்திரத்தால் - நாகஸ்வரம் ஊதிவர - வைராக்கிய கத்திகொண்டு வளையவந்து ராஜன் - எதிரற்ற செட்டியுடன் - எதிர்கொண்டு ராஜன் - எல்லையற்ற செட்டி தன்னை - மன்னவனும் பார்த்து மனமகிழ செட்டியவன் எதிர் கொண்டுவாரான். ஏலேலோ ஏகரஸம்

(வேறு)

வர்த்தகனை வரவழைத்து - ரத்தினம் மதிபார்ப்போம் விலை கூறி - புத்தியுக்தி வர்த்தகனும் போக்கு வரவற்றசெட்டி - நிர திசயமாம் கப்பலிலே - அதிலே அத்வைதரத்தினமுண்டு - நல முடையவஜ்ரமுண்டு - அதிலே ராகமில்லை துவேஷமில்லை - மஹிமையுள்ள முத்து முண்டு புடைத்துவாழ்ந்திருப்பீர் ஸுக மாக-இதையறிந்திருந்தும் வெகு ஜனங்கள் உற்று அனுபவிக்க அறியாமல் அகம்மதியாலறி வழிந்து அவித்தையின் வசம் சேர்ந்து பிரமையதினுல் பிறந் திறந்து - பேரின்பம் தன்னை மறந்து - தன் கழுத்தில் தரித்த ரத்தினம் தான் மறந்துதேடுவர் போல் - வந்தொருவன் காட் டையிலேகழுத்தில் மரந்தரத்தி னம் பூண்டவர்போல் - பந்த மென்னும் ஸம்ஸாரம் தன் னிலே-யுழலுகிற வெகு ஜனங் கள் - தொந்தமென்னும் அவித் தையுடன் கூடி - விஷயஸுகம் தன்னை புஜித்தான் - அதிதூர மதிஸமீபம் அதி ஸூக்ஷ்ம மதி ஸுலபம் - அருமையான ஆத்ம வித்தை - அதையறிந்த போர்க்கு லகுவிதுதான் - அவர்மகிமை யறியவென்ருல் ஆதிசேஷருக் கும் அறிதறிது சிவோஹம் சிவோஹம்

(முடுகு)

வஸ்துவே ரத்தினம் பச்சை வஜ்ர வைடூரியம் மரகதமாணிக் கம் நீலகல்பவழம் புஷ்யராகம் சிவப்பு கோமேதகமென்றும் பார்க்க இரண்டில்லை ஸாக்ஷி யானரத்தினம். ஏலேலோ ஏக ரஸம்

(வேறு)

ஸ்வபிரகாசரத்தினமிது ஸ்வ யம் ஜோதியாணிமுத்து - அக்ஷ ரத்திலொட்டாத ஆபரோக்ஷ ஸ்வருபமிது எத்திசைக்குமோர் ஒளியாய் விளங்கும் நவரத்தின மிது. சிவோஹம்-சிவோஹம்

(முடுகு)

ஏகமேவாதுவிதீயம் பிரம்மை வாஹம் - எங்கும் வெளியிடை யில்லாமல் நிரைந்த தொரு பிரம்மம் - வாக்கு மனதுக்க கோசரமாய் வஸ்துமயரத்தி னம் - ஜாதிவர்ண நாமருபம் தள்ளி-ஒளியாய் போதமயமாய் நிரைந்த தொரு - ஜோதியான ரத்தினம். ஏலேலோ ஏகரஸம்

(வேறு)

குருகிருபையால் வந்த கப் பல் - குணுதீதமாயிருக்கும் - நிர் குணத்தில் நிலைத்ததொரு நித் தியமாம் கப்பலிது-மஹா வாக்கி யார்த்தகப்பலிது - வஸ்துமயமா யிருக்கும் - என்றும் வர்த்தகனும் சொல்லலுமே - செட்டி மன மகிழ்ந்து - தான் பார்த்து - பிரஞ்ஞையினுல் பார்த்தவ னும் பிரம்மமென்று தான் அறிந்து. சிவோஹம், சிவோ ஹம்.

(முடுகு)

அஹம்பிரம்மாஸ்மி என்னும் ஆனந்தத்தை யடைந்து - தத்வமஸி வாக்கியத்தால் தாமே தாமாகி - அயமாத்மா பிரம்மமென்னும் ஐக்கியம் தன்னை யடைந்தான் - மஹிமையுள்ள கப்பல் தன்னை - மஹாத்மாக்கள் பார்த்து - மஹத் குரு பாதத்தில் வந்துமவன் பணிந்தான் - பணிந்தவரை யாதரித்து பரமகுரு அப்போ - பரமான ஹஸ்தத்தை மஸ்தகத்தில்வைத்து - பாங்காக மோக்ஷஸுகம் தன்னை யளித்தார் - கேட்டவர்கள் எல்லோரும் கிலேசமற்றிருப்பார் - பார்த்தவர்கள் எல்லோரும் பரிபூர்ணமாயிருப்பார்-அத்துவைதியானவர்கள் அனுபவத்தை அடைவார் - அபரோக்ஷானுபவத்தில் ஆனந்தமாய் இருப்பார். ஏலேலோ ஏகரஸம்

---

## மெய் பொய் விளக்கம்

(ராகம்—ஆனந்தபைரவி)

ஸ்வபிரகாச ஸுகஸ்வரூபம் தானடா நீதானடா
சுக்தி ரஜதம்போல் ஜகம் மித்தையது ஆமடா
அப்பிரகாச அவித்யாதி ஆவரணம் பொய்யடா
அனிருத ஜடதுக்கமில்லா அகண்ட ரஸம் மெய்யடா 1

அண்டபிண்ட பிரம்மாண்டமெல்லாம் அத்தியாஸம் பொய்யடா
ஆதி அந்தமத்யமில்லா அறிவே நீமெய்யடா
சம தமாதி ஸாதனசதுஷ்டயங்களும் பொய்யடா
ஸாத்திய ஸாதக மற்ற கர்மஸாக்ஷி நீமெய்யடா 2

ராக துவேஷ காம க்ரோத லோபாதிகள் பொய்யடா
ராஜஸாதி தமோ ஸத்வ வேஷமற்றயிடம் மெய்யடா
பஞ்சபௌதிக பஞ்சவிஷய பாபபுண்ணியம் பொய்யடா
பரபிரம்மானந்த ஸுகம் பரமாத்மா மெய்யடா 3

ஜாதி வர்ண குலகோத்திர ஆசிரமாதிகள் பொய்யடா
ஸத்தியஞானனந்த ஸுகஸாகரம் நீமெய்யடா
சிரவண மனன நிதித்யாஸன சித்தவிப்பிரமம் பொய்யடா
சின்மயமே தன்மயமாம் சிந்தையற்றயிடம் மெய்யடா 4

ஜாக்கிர ஸ்வப்ன சுஷுப்தியாதி அவஸ்தைகள் பொய்யடா
தரங்கபேன புத்புதங்கள் தனக்கில்லை மெய்யடா
கர்மேந்திரியம் மனம் பிராணன் சித்தபுத்திகள் பொய்யடா 5
ஞானரஸ சித்ஸ்வரூபம் நீமெய்யடா

ஞாதுருஞான ஞேயத்வாதி திரிபுடிபேதம் பொய்யடா
ஞான விஞ்ஞான பிரகாசானந்தகனம் மெய்யடா
அஸ்தியாதிஸ்தூலதத்வமும் ஐயைந்தும் பொய்யடா 6
அசலமான சித்ரூப அன்வயம் நீமெய்யடா

விச்வன் தைஜஸ பிராஞ்ஞ விராட் இரண்யகர்ப்பர் பொய்யடா
விவிதநாம ரூப ரஹித விமலபோதம் மெய்யடா
ஸ்தூல ஸூக்ஷ்ம காரணத்திரய காரியங்களும் பொய்யடா 7
ஜோதிர்மயானந்த ஸுகஸ்வரூபம் நீமெய்யடா

அனுஷ்டான கர்த்திரு கர்ம காரியாதிகள் பொய்யடா
அகம் பிரயத்தியகாத்மா உற்று பார்த்தனுபவித்தால் மெய்யடா
ஜனனமரண சோகமோக ஸுகதுக்கபாதைகள் பொய்யடா 8
தேசகால வஸ்துகிருத பரிச்சேதரஹிதம் மெய்யடா

நிரம்சத்தில் அம்சமுண்டோ நிஜம்பாராய் பொய்யடா
நிஜ போதாந்த ஸுகஸாகரம் நீ மெய்யடா
பொய்யும் மெய்யுமாகதோன்றும் புத்திகல்பிதம் பொய்யடா 9
புத்திவிருத்திகளற்ற போதானந்த ஸுகபோதம் நீ மெய்யடா

திவ்யமங்கள மூர்த்தி வெங்கடேசுவரர் குரு கிருபையினுல் 10
தினகரன்போல் விளங்கும் ஞானபிரகாசம் நீமெய்யடா

---

(ராகம்—ஸௌராஷ்டிரம்)

பல்லவி

தன்னைத்தானறியவேணும் தத்துவத்தால் (த)
தன்னைத்தானறியவேணும்

அனுபல்லவி

தன்னைத்தானறியவேணும் தானவனாகதோனும் உண்மைகாணும் (த) 1
சொன்னதும் பொய்யில்லைகாணும் ஜோதியதே

சரணம்

வாதிகள் வழக்கு தீரவானுக்குள் நின்றும் ஜோதியைக் கண்டுடன் சேர
ஆதியான உடல் மாற அனாதியான பந்தம் தீர போதமென்னும் பூரணத்தில் ஏற
பொல்லாத கர்மவாஸனையை விட்டு மனம் சீராய் வையகம்பொய் யென்றோத
உபநிஷத்தென்றும் கூற அதிலே நின்றும் போத வெள்ளம் பொங்கிவர
பேதைகளும் கரையேற ஜாதிவர்ணங்களும் தீர அபேதைகளும் உள்ளம் தேர (த) 2

பஞ்சபூதங்களை பார்த்து அதிலுண்டான அஞ்சுகோசங்களை தீர்த்து
மனசஞ்சலமறுத்து புலன் ஐந்தையுமடக்கி யதில் மிஞ்சினதை கண்டு நீகளித்து
மேலாம்பதமாய் அசஞ்சலமாகவே நிறுத்தி அதிலே நின்றும் பஞ் சணையிலே படுத்து பார்த்து
பரஸுகத்தால் கொஞ்சமோ காணிந்தகூத்து கொஞ்சமில்லா மலே எதிர்த்து
ஸஞ்சிதாகாம்மியமற்று தஞ்சமாம் குருவை கார்த்து (த) 3

பாசவலையில் சுத்திவாடி அதற்குள் கர்மவாசலுண்டனேகம்கோடி மனவாசலால் நடந்து நாடி
ஆசையாம் ஒருத்திவாடி மனவாசலை அடைத்து அவள் மூடி வழி மறைப்பள் நேசமுடனே நடந்து ஓடி
நினைவுகொண்டு மாசில்லாமணி விளக்கை நாடி
மனஸுருகி வாஸனென்னும் குருவெங்கடேசுவரரை கண்டு கூடி
ஈசன் நானென்று கொண்டாடி வாஸனைகள் விட்டோடி (த) 4

---

(ராகம்-ஸஹானு)

பல்லவி

அதிகஸாமர்த்தியம் மாயை உன்தன்
வெகுவித நாட்டியம்

அனுபல்லவி

அகிலபிரபஞ்சமாய் ஆனதும்போராமல் அகண்ட ரஸம்தன்னை (அ)
மறைத்தாய் தெரியவொட்டாமல்

சரணம்

ஜடையாக மூன்று குணத்தினால் ஜகமெல்லாம் ஈன்று
வினையாலே ஜீவர்கள்மோகிக்கவே பார்த்தாய் (அ) 1
பவஸாகரம் தன்னில் முழுகிபோகவே பார்த்தாய்

ஜகத்ஸத்தென்றும் தேஹம்நாஹம் பரபிரம்மம் என்றும்
தெரிந்தபேரைகூட திகைக்கப் பண்ணியே வைப்பாய் (அ) 2
அகடித சௌரியம் அஹோ உன்தன் கூத்து

ஸஹஸ்ரத்தில் ஒருத்தன் உன்னையும் பார்க்க ஸாமர்த்திய கர்த்தன்

ஸர்வமும் பிரம்மமாய் தான் தானே ஸர்வமாய் (அ) 3
ஸ்வாமி வெங்கடேசுவரர் குருகிருபையினாலே

ஸவரூபம் மறந்து ஸம்ஸாரத்தை ஸுகம்போல் நினைந்து
துஷ்கர்ம ஸத்கர்ம பலன்களெல்லாம் கொண்டு (அ) 4
செத்து பிறக்க வைத்தாய் சற்றுமறிவில்லாமல்

தான் பிறரென்றும் சதுர்வித வர்ணங்களென்றும்
தாய் தந்தை பந்து தனமுண்டு எனக்கென்றும் (அ) 5
ஸம்ஸார ஸாகரத்தில் தானே உழலவைத்தாய்

சுவரில்லா சித்திரம்போல் உந்தன் ஸ்வரூப மஸத்தியம்
ஜறையில்லை நறையில்லை ஜனன மரணமில்லை (அ) 6
கறையில்லை உன்னுடைய காரியவிசித்திரங்கள்

ஸ்படிகமண்டபத்தில் சுவானம் தன்னை தவிர கண்டவிடத்தில்
சாடி ஓடிக்கொண்டு கூடிக்குலைக்கும் போல் (அ) 7
காணு விகல்பித நாய் போலலையவைத்தாய்

## கண்ணிகள்

ஸ்ரீகுருவை சிந்தனை செய்து தியானம் பண்ணவே
தேவிவாணி நாவில்வந்து முன்னடக்கவே
தக்ஷணாமூர்த்தி ஸ்வரூபர் ஸ்ரீ வெங்கடேசுவரர்
சிந்தைதன்னில் நித்தியமாய் சின்முத்திரையுடன் 1

ஜீவபராள் ஐக்ய யுக்தி சொல்லியேவந்த
தேசிகனுர் பாதமி ரண்டும் துணையதாகவே
அரணவித்து காற்றினால் அலைகுமிழியுடன்
ஆகாரமாய்தோன்றி ஒன்ருய் ஐக்கியமாஞபோல் 2

ஆத்மாகாரம் தன்னிலேமாயையாம்காற்று
அடித்து அண்டபிண்டாதிகள் உண்டாய்லயிக்கும்
மாயையென்னும்காற்றமர்ந்து வஸ்துமாத்திரமாய்
வாரிதிமாத்திரமதாக ஏகரூபமாய் 3

இயமநியமாஸனபிராணயாமங்கள் பிரத்தியாகார
தாரண தியான ஸமாதிகள்
எட்டுவிதமான ஸமாதிதன்னிலே - ஏகாக்கிரமாய்
புத்தி ஸாமர்த்திய மிருந்தாலும் 4

அனேகவித கிரந்தங்க ளோதி யிருந்தாலும்
ஆதிகுரு பூரண கிருபை யில்லாமல் போனுல்
ஆகாசாதி வாயுதன்னை கையில்பிடித்து
அம்மானை ஆடினாலும் அறியவே மாட்டார் 5

தியான சூர ராசாராதி நித்தியகர்மங்கள்
சாஸ்த்திர வித்தைதன்னிலே ஸமர்த்தர் நாமென்றும்
நல்ல க்ஷேத்திரவாஸிநாங்கள் தீக்ஷிதரென்றும்
நல்லகுல நல்லகுண ஜாதி நாமென்றும் 6

அகம்திஅடைந்து கர்வ பர்வதமேறி
அந்தலோகம் தன்னிலே சுகம்உண்டு என்றும்
புத்திரர் மித்திரர் பந்து தன வித்தையுண்டென்றும்
பூமியிலே என்னை மிஞ்சியாருண்டு என்றும் 7

அனுதினமும் ஸ்வர்கம் தன்னில் ஏறிவிழுந்து
அலைகடல் துரும்புபோலலைந்து திரிவார்
யாரறிவாரென்று கேட்டால் ஆதிஜோதியை
ஆதிகுரு பூர்ணகிருபையாலே யறிவார். 8

எப்படிஎன்றால் இதில்யுக்தி சொல்லுகிறேன்
ஏகாக்கிரமாய் தியானம் பண்ணும் கிருமிகளைபோலே
இப்படிப்பட்ட குருவை ஏகாக்கிரகமாய்
ஈசஜீவாளென்னு மிந்தபேரை மறந்து 9

வினயத்துடனே வணங்கி விசுவாஸமாக வேண்டி
நமஸ்காரம் பண்ணி பக்தியுடனே
அநேகவித யுக்திதன்னில் மூடனுனாலும் 10
அஞ்ஞானுதி அஸ்தமித்து ஞான உதயமாய்

ஸத்துசித்தானந்த ஸர்வாதீதராய் ஹஸ்தகர பாணிபோல்
பேதம் இல்லாமல் விருத்தி பஞ்சகங்களிலே ஞாபகமாக
விஸ்வகாரண குருவைவேறே எண்ணுமல் 11
திரிவிதபரிச்சேத சூன்யமான வஸ்துவை

ஸ்ரீமத் வெங்கடேசுவரர்ரென்றும் நிச்சியித்தாக்கால்
ஜனன மரணுதி என்னும் பீதிநாசமாய்
சிதாகாச சைதன்யமாய் சின்மயமாவார் 12
சிதாகாச சைதன்யமாய் சின்மயமாவார்

---

(ராகம்-புன்னகவாரளி)

பல்லவி

மாயை இப்படி செய்வாயோ (மா)
மஹத்தாதி பிரபஞ்சமாய் ஆவாயோ மெய்போலே

அனுபல்லவி

பாயும் சரமும் காற்றும் வாழ்வும் மனமும் வேகம்ஓயாதோ (மா)
விகல்பங்கள் ஒருபோதாகிலும் சற்றே

சரணம்

உதயத்தில் குருடனுய் உலூகம்போலாச்சுதே
ஒளியாய் இருந்த தத்வம் தெரியாமல் போச்சுதே
மதியினில் அபிமானம் அதிகமாய் ஆச்சுதே (மா) 1
துரீயம் ஸகளமென்று தெரியாமல் போச்சுதே

உலகம்பதினுலும் நொந்துமிகவே வாடி
காகம்போலே ஓடி கண்டவிஷயம் நுடி
மோகவாரிதி தன்னில் மூழ்கி மெத்தழுது (மா) 2
ஏகமென்கிற ஞானம் இறந்துபோச்சையோ

அரியவெங்கடேசுவரர் குருவின் கிருபையினுல்
மதியைநிருத்தி யிந்தஜகத்தை சின்மயமாய்
பரதத்வம் ஸதானந்தம் கருத்திலே ஸ்திரமாய் (மா) 3
பார்த்தபேர்களுக் கெல்லாம் மதித்து நிர்பயமாய்

---

(ராகம்-மோஹனம்)

பல்லவி

பிரமையைதூரவிட்டு விடடா-பிரம்மஸ்வரூபமதாகி இருடா

அனுபல்லவி

சுமையேன் சுமந்து கொண்டு உமையாபூதம்போல் ஏண்டா
ஏண்டா ஏண்டா அலைந்து சாகிறாய் (பி)

சரணம்

அவித்தை என்னும் பெண்ணை வேட்டாயே
ஆத்மஸ்வரூபத்தை அறியாது கெட்டாயே
பவத்தில் முழுகி மிஞ்சி பட்டாயே
பஞ்சகோசமும் நானென்று கெட்டாயே
ஜகத்தில் கர்ம வேரை நட்டாயே
பருவான சாஸ்திரத்தை கேட்டாயே
மகத்துகள் சரணத்தை ஸ்துதித்து நித்தியமாக பணிவாய்
பணிவாய் பணிவாய் சொன்னேன் சொன்னேன் (பி) 1

ஜீவத்துவம் உனக்குத்தான் ஏதடா
சுத்தசைதன்ய வஸ்து நீ தானடா
நாமத்தை முதலாக்கி தள்ளடா
நல்ல புத்தியை பரிபாலனம் பண்ணடா
பரமாத்மாவென்பதும் பொய்யோடா
இத்தருணமே விசாரித்து பாரடா
எள் மாத்திரமானாலும் உன்னைத் தவிர வேறேகாணேன்
காணேன் காணேன் சொன்னேன் சொன்னேன் (பி) 2

தன்னை விசாரித்து பார்த்தாயோ
உன் தன்னிலே தன்னை யறிந்தாயோ
உன் கர்மம் இன்னதென்று அறிந்தாயோ
நித்திய கர்மானுஷ்டானத்தை செய்தாயோ
பெருமை சிறுமை விட்டு பொறுமை பூஷணத்தை அணிவாய்
அணிவாய் அணிவாய் சொன்னேன் சொன்னேன் (பி) 3

ஆசையால் கெட்டு அலைந்தாயே
உன் அகங்காரத்தால் பிடிபட்டு நொந்தாயே
ஆவரணத்தை பூட்டி கொண்டாயே
அவிவேகத்தால் கோபமது கொண்டாயே
மோகத்துடன் கூடி கெட்டாயே
நிலையாத ஸம்ஸாரத்துள் பட்டாயே
காமக்குரோதத்தாலே அலைந்து நித்தியமாக கெட்டாய்
கெட்டாய் கெட்டாய் சொன்னேன் சொன்னேன் (பி) 4

இதம் சொன்னேன் காதில் பட்டதோ
எளிதான வழியில் விட்டதோ
மதபேதங்களெல்லாம் அற்றதோ
மகத்தான விஞ்ஞான வன்னி சுட்டதோ
அஹம் பிரமை என்பதும் அற்றதோ
இந்த ஆசிரம தர்மங்கள் விட்டதோ
ஸ்வீயகுரு ஸ்ரீகுரு வெங்கடேசுவரர் கிருபையால் ஆனேன் 5
ஆனேன் ஆனேன் சொன்னேன் சொன்னேன்

---

(ராகம்-குருவைப் பணிந்து கடைத்தேறு-என்ற மெட்டு)

பல்லவி

சிறுக்கி நடையும்பிடி இடையும் உடையும் கண்டு
சிந்தை உருகலாமோ மனமே

அனுபல்லவி

பொறுக்கி எடுத்த ஞானம் போகுமோ சொன்னேன் (சி)
கறிக்கு பாதி போன சுரைக்காய் விறைக்காகுமோ

சரணம்

அலையில் துரும்பதுபோல்
அலைந்து திரிந்துமிந்த வலையில் சிக்கின மான்போல்
மயங்கி திரிந்தொருக்கால்
தலையிலிடித்ததென்று
தாழக் குனியாயோ சொன்னேன் (சி) 1
தலையிலெழுத்துக்குத்தான் என்ன செய்யலாம்

தோலும் இறைச்சியுடன் சேர்ந்த உதிரம் செய்யும்
காலும் தலைமுலையால்
கண்ட உதிரமிது
நாறுமென்று தெரிந்தும் (சி) 2
நரகம் புஜிக்கலாமோ
பாலும் பழமும் உண்ணபாக்கியம் இருக்குங்கால்

மாயா உலகத்தோடு மயங்கித் திரிந்து
மிந்த காயா புரியை மனம்
கை விடும் காலத்தில்
பேயாய் திரியவேண்டாம் (சி) 3
பிரம்ம நிலைக்கடலாழ்ந்து
வெங்கடேசுவரரை யறிந்து கொள்வாய்

---

(ராகம்—நாதநாமகிரியை)

### பல்லவி

கோபம் செய்யாதே மனமே நீ
பாபம் செய்யாதே மனமே (கோ)

### அனுபல்லவி

பூவின்மணத்தை புருஷனறியும் போதே அபரபிரம்ம பாவத்தை
[காணவே
கூவிபணிந்து குருவின் பாதத்திலே சேவித்து கொண்டால்
[illegible]
சிதானந்த மாகுவாய் (கோ)

### சரணம்

பக்தியை தேடவேணும் சுருதியில் யுக்தியை அறியவேணும்
சுக்தியில் ரஜதம் போலே ஜகத்தில் நீ சக்தியறிந்து
ஸதா சிவமாகிற முக்தியறிந்து மோகாதிகளை போக்கி
வியக்தா வியக்தமும் தானுய் போகுவாய் (கோ)

துஷ்டர்களெத்தனையோ ஜகத்தில் சிஷ்டர்களெத்தனையோ
வியஷ்டி ஸமஷ்டி விதமாயிருந்தாலும் ஸ்ருஷ்டிக்கு முன்னே
ஜகத்துண்டோ சொல்லடா கஷ்டமாம் கர்மத்தை விட்டுத்
[தொலையடா
நிஷ்டையில் தானே நிஜரூபாமாயிருடா (கோ)

காமத்தில் போகாதே போனுக்கால் தாமஸம் வந்து விடும்
ஆமோயினி சொல்லு தாமஸம் செய்வதும் பிரேமையுடனே
சிவராமனை பாரடா க்ஷேமமடைவாய் ஸுகமடைவாய்
சொன்னேன்
உந்தன் கோமதியை தானே கொண்டாடி கொள்ளடா (கோ)

---

# வேதாந்தப்பள்ளு

சாந்த நரஸிம்ம ரென்னும் ஸத்குருவை பணிந்து 1
ஸந்ததமும் வேதாந்தப் பள்ளை நான் பாட

ஸரஸ்வதியே பாரதியே ஸாரங்கி சியாமளியே 2
ஸந்ததமும் நாவில் வந்து விளையாட வந்த மயிலே

கோமளமே சியாமளமே கொந்தளமே குயிலே 3
குறைவு ஒன்றும் வாராமல் நிறைவேற்ற வேணும்

பானகமும் மோதகமும் பொங்கல்பிடி அமுதும் 4
ஆனபடி நான படைப்பேன் ஆனை முகத்தோனே

என்னுடைய பிழை பொருத்து முன்னடக்கவேணும் 5
தன்னுடைய புத்திரன் சொல் அன்னை உகந்தாப்போல்

அபத்தமது யிருந்தாலும் அக்ஷரத்தைத் தவிர 6
அல்லாமல் இல்லை யென்றறியும் பெரியோர்கள்

பொரி கனியும் மோதகமும் பொங்கல் பிடியமுதும் 7
அடைவுடனே நான் படைப்பேன் ஆனை முகத்தோனே

அண்டபிண்ட லோகமெல்லாம் அஞ்ஞானத்திலொடுங்கி 8
அகில ஜகமத்தனையும் பிரளயம் வந்து முழுகி

பர பிரும்மம் மாயையிலே பிரதிபலமும் கூடி 9
பாங்குடனே ஈசுவரனாகி அவதரித்தார்

அதிஷ்டான வித்தையிலே பிரதி பலமும் கூடி 10
அடைவுடனே ஜீவனுமாகி அவதரித்தார்

இப்படியே வெகு காலமி ... ற்றபோது வஸ்து 11
வீக்ஷணையினாலே ஒரு மாயை வந்து பிறந்தாள்

வந்தவொரு மாயை தன்னை மஹத்தத்துவமாகி 12
மஹதகங்காரத்தோடே யது மூன்று குணமாச்சு

தன் மாத்திரையோடு பஞ்ச பூதங்களும் கூடி 13
க்ஷணிகத்திலே ஸூக்ஷ்மமென்று தேஹமுமுண்டாச்சு

